# வரலாற்றுப் புலவர்கள்



துணைப்பாட நூல்



ஆறும் வகுப்பு

ராஜா ராம்சந்தர் & கம்பெனி,
...ல்லிக்கேணி ஹைரோடு, சென்னை-5.

# வரலாற்றுப் புலவர்கள்

துணைப்பாட நூல்

## ஆறும் வகுப்பு

ஆசிரியர் :

வித்துவான் கொ. சு. பதுமநாபன்,

தமிழாசிரியர், இந்து உயர்நிலைப்பள்ளி,

திருவல்லிக்கேணி, சென்னை-5.



பிரசுரகர்த்தர் :

ராஜா ராம்சந்தர் & கம்பெனி

520, திருவல்லிக்கேணி ஹைரோடு, சென்னை-5.

முதற் பதிப்பு—1968



புதிய பாடத்திட்டப்படி தயாரிக்கப்பெற்றது



Paper used : 10·9 kg. D.C. White Printing



விலை 80 காசு

ராஜா ராம்சந்தர் பிரஸ்,
4, நல்லதம்பி முதலி தெரு, சென்னை-5.

# முன்னுரை

நம் தாய்மொழியாகிய செந்தமிழ் மொழியை வளர்த்த சில புலவர்களுடைய வாழ்க்கை வரலாறுகள் இந்நூலில் தரப்பட்டுள்ளன. இந்நூலைக் கல்வி நிலையத்தோர் விரும்பி ஆதரிப்பர் என்று நம்புகிறேன்.

ஆசிரியர்.

# பொருளடக்கம்

# 1. நக்கீரர்

தமிழ்ப் புலமை நிரம்பிய பெருமக்களில் நக்கீரர் ஒருவர். தமிழ்ப் புலவர்களிலேயே ஒரு விதத்தில் இவர் மிகச் சிறந்தவர் என்று கூடக் கூறலாம். இன்றைக்கு ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மதுரையில் ஒரு தமிழ்ச் சங்கம் இருந்தது. இச் சங்கத்தை மதுரையை ஆண்ட பாண்டி மன்னர்கள் விருப்போடு போற்றி வளர்த்தார்கள். அந்நகரில் எழுந்தருளியுள்ள சொக்கநாதக் கடவுளும் இத்தமிழ்ச் சங்கப் புலவர்களில் ஒருவராக இருந்து தமிழாராய்ந்தார். இத்துணைச் சிறப்புற்றிருந்த தமிழ்ச் சங்கப் புலவர்கள் நாற்பத்தொன்பதின்மர் ஆவர். இச்சங்கத்திற்கே நக்கீரர் என்னும் புலவர் தலைமை தாங்கினர் என்றால் அவர் பெருமையை என்னென்று உரைப்பது!

மதுரை மாநகரில் ஒரு பேராசிரியர் இருந்தார். இவரிடம் எண்ணிறந்த மாணவர்கள் முத்தமிழும் கற்றுப் புலவர்கள் ஆயினர். தமிழ்ப்பாடம் சொல்லுவதில் இவருக்கிருந்த பெருமையால் இவரை எல்லாரும் 'கணக்காயர்' என்றே அழைக்கலாயினர். 'கணக்காயர்' என்ருல் 'ஆசிரியர்' என்று பொருள். நாளடைவில் இப்பேராசிரியருடைய இயற் பெயர்கூட மறைந்துபோய்க் 'கணக்காயனுர்' என்னும் சிறப்புப் பெயரே நிலேத்துவிட்டது. இப்பெயர் பெற்ற கணக்காயனுருக்கு இறைவன் திருவருளால், தமிழே மனித உருவோடு அவதரித்ததுபோல ஓருருமைக் குழந்தை பிறந்தது. இம்மகவே நக்கீரர் என்று தமிழகம் போற்றும் புலவர் பெருமானும்.

இவர் அந்தண குலத்தவர் என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். முற்காலத்தில் சில அந்தணர்கள் படித்தல், படிப்பித்தல் முதலிய தமக்கென ஏற்பட்ட தொழில்களே மறந்து பிற தொழில்களே மேற்கொண்டனர். இவ்வாறு இவர்கள் மேற்கொண்ட தொழில் களில் சங்கறுத்து அணிகலன்கள் செய்யும்

தொழிலும் ஒன்று. இத்தொழிலை மேற் கொண்ட அந்தணர்களை வேள்வி செய்யாத அந்தணர்கள் என்று ஒரு புலவர் குறிப்பிடு கிறார். 'கீர், கீர்' என்று சங்குகளை அறுத்ததால் நமது புலவர் பெருமானுக்கும் 'கீரர்' என்று பெயர் உண்டாயிற்று என்று கூறுவர்.

நக்கீரர் சிறுவயதிலேயே கற்கவேண்டு வனவற்றையெல்லாம் ஐயம் திரிபு அறத் தம் தந்தையாரிடத்தும், பிறரிடத்தும் கற்றுத் தெளிந்து பெரும் புலவரானார். இவரது புலமையின் பெருமையை நன்கு உணர்ந்த பாண்டியனும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் தலைமைப் புலவராக இவரை நியமித்தனன்.

அக்காலத்தில் சங்கப் புலவர்கள் வீற் றிருப்பதற்கு ஏற்றதோர் கன்மாப்பலகை ஒன்று சோமசுந்தரக் கடவுள் திருவருளால் பாண்டியன் அவையில் இருந்தது. இப் பலகை புலமைமிக்க பெரியோர் எத்தனைபேர் வந்தாலும் அவர்கள் வீற்றிருக்க இடம் தரும் பெருமையுடையது. புலமை நிரம்பாதோர்க்கு அது இருக்கவும் இடம் தராது. இப்பலகை நக்கீரருக்கு முதலிடம் தந்து ஏற்றுக்கொண்

டது. கபிலர், பரணர், மாமூலர் முதலிய புலவர் பெருமக்கள் நக்கீரர் தலைமையில் கன்மாப்பலகையில் இருந்து முத்தமிழையும் ஆராயும் தொண்டாற்றி வந்தனர். இப் புலவர்கள் பல பொருள்களைப் பற்றி வாது புரிவதற்கும் சங்கத்தை நாடிவரும் புலவர்களோடு இலக்கிய ஆராய்ச்சி நடத்து வதற்கும் பாண்டிய மன்னன் இப்புலவர் களுக்கு ஒரு மண்டபம் கட்டி அளித்திருந் தான். இம்மண்டபத்திற்குப் 'பட்டி மண்ட பம்' என்று பெயர்.

ஒரு நாள், சங்கப் புலவர்கள் யாவரும் கன்மாப்பலகையில் இருந்து தமிழ் நூல் களை ஆராய்ந்து கொண்டிருந்தபோது ஒரு பணியாளன் வந்து, ''யாரோ ஒரு புலவர் சங்கத்தாரோடு வாது புரிய விரும்பி வந்திருக்கிறார்'' என்று அறிவித்தனன். புல வர்களோடு வாது புரிய வந்தவன் குயக் கொண்டான் என்பவன். சங்கப் புலவர் களும் பட்டி மண்டபம் புகுந்து அவன் கருத்தையறிய விரும்பினர். அங்குப் போந்த குயக்கொண்டான் சங்கப் புலவரது பெரு

மையையும் தமிழின் அருமையையும் அறியாதவன்; புலவர்களையும் தமிழையும் இழித்துக் கூறவேண்டும் என்னும் ஒரே கருத்தைக் கொண்டவன். அவன் அம் மண்டபம் ஏறி "வடமொழியே சிறந்தது, தமிழ் இழிந்தது" என்று கூறி வாதிட்டான். தமிழை இழித்துக் கூறிய அறிவிலியிடம் வாதிடுவதினும் அவனை ஒறுப்பதே சிறந் தது என்று கருதிய நக்கீரர் உடனே ஒரு மந்திரம் கூறி அவனைச் சபித்துவிட்டார். 'குணமென்னும் குன்றேறி நின்றார்' வாக் காதலின், குயக்கொண்டான் அக்கணமே இறந்து விழுந்தான். அவ்வெளியவனது அறியாமையையும் நக்கீரரது சினத்தையும் கண்ட ஏனைய புலவர்கள், புலவர் பெருமானை வேண்டி அக்குயக்கொண்டானை மீளவும் உயிர்ப்பிக்க வேண்டினர். சினந்தணிந்த புலவரும் குயக்கொண்டானை உயிர்ப்பித்தார். குயக்கொண்டானும் மனம் தெளிந்து சென்றான்.

அக்காலத்தில் மதுரையில் ஒரு பெரிய பஞ்சம் உண்டாயிற்று. புல், பூண்டு

கூடக் காணப்படவில்லை. புலவர்கள் எல்லாரும் பாண்டியனை அணுகித் தமக்கு இனி மதுரையில் இருக்க இயலாதென்றும் வேறு நாடுகளுக்குப் போய் இருந்து, பாண்டி நாட்டில் மழை பெய்து நல்ல நிலைமை எய்திய பின் வருவதாகவும் கூறிச் சென்றுவிட்டனர். அந்நிலைமையில் புலவர்களை வற்புறுத்த மனமில்லாத பாண்டியன் நல்லகாலம் வரட்டும் என்று இருந்து விட்டான். சில ஆண்டுகளுக்குப் பின் நாடு நிறைய மழை பெய்து பஞ்சம் நீங்கிச் செழிப்பு உண்டாயிற்று.

தன் அவையை விட்டுச் சென்ற புலவர்கள் போன இடம் அறியாத பாண்டியன் அவர்கள் எங்கிருந்தாலும் தேடி அழைத்து வருமாறு ஆட்களை அனுப்பினான். சென்றவர்கள் நாடெல்லாம் தேடிப் புலவர்களை அழைத்துக்கொண்டு வந்தார்கள். வந்த புலவர்களில் அகப்பொருள் இலக்கணம் அறிந்தவர்களைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் வந்திருந்தனர். இதனால் பாண்டியனுக்குப் பெரிய வருத்தம் உண்டாயிற்று. அகப்பொருள் இலக்கணம் தெரியாவிட்டால் தமிழ்

அறிவினுல் பயனில்லேயே என்று அரசன் வருந்திஞன்; ஊணுறக்கமின்றித் தவங் கிடந்து மெலிந்தான்.

அரசனுடைய துன்பத்தைத் துடைக்க விரும்பிய இறையனர், அகப்பொருள் இலக்கணத்தை அறுபது சூத்திரங்களில் எழுதித் தமது கோயில் பீடத்தின்கீழ் இட்டு வைத்தார். அதுகண்ட அருச்சகர் ஏடுகளேக் கொண்டுபோய் அரசனிடம் காட்ட, அவை அகப்பொருள் இலக்கணமாயிருக்கக் கண்ட அரசனுக்குப் பெருமகிழ்ச்சி உண்டாயிற்று. பிறகு நக்கீரர் உள்ளிட்ட சங்கப் புலவர்களேக் கூப்பிட்டு அச்சூத்திரங்களுக்கு உரை காணுமாறு அரசன் வேண்டிஞன். புலவர்கள் கன்மாப்பலகைமேல் ஏறியிருந்து சூத்திரங்களே ஆராய்ந்தனர். பலர் பலவகையாக உரை கண்டனர். ஆயினும் அவர்களில் ஒவ்வொருவரும் தாம் கண்ட உரையே சிறந்ததென்று கூறத் தொடங்கினர். ஆகையால் எல்லாரும் பாண்டியனிடம் சென்று தங்கள் உரைகளேக் கேட்டுச் சிந்தித்துப் பார்த்து உண்மையுரை யாருடையது என்று

கூறவல்லவர் ஒருவரை நியமிக்க வேண்டும் என்று கேட்டனர். இந்நாற்பத்தொன்பது புலவர்களைக் காட்டிலும் சிறந்த ஒரு தலை வனைத் தேடத் தன்னால் இயலாது என்று பாண்டியன் மறுத்துவிட்டான். வேறு வகை யின்றிப் புலவர்கள் இறைவன் கோயிலிற்குச் சென்று தவமிருந்தனர். அப்போது அவர் களுக்கு ஓரசரீரி வாக்குக் கேட்டது. மதுரை யில் உருத்திரசன்மன் என்னும் பெயருடைய ஊமைச் சிறுவன் ஒருவன் உண்டென்றும், அவன் முருகக் கடவுளின் அமிசம் என்றும், அவனை நடுவனாக வைத்துப் புலவர்கள் தங்கள் உரைகளைக் கூறி வந்தால் யாருரை கேட்டபோது அச்சிறுவன் மெய்ம்மயிர் சிலிர்த்துக் கண்ணீர் சொரிகிறானோ அவ ருரையே சிறந்ததென்று கொள்ளவேண்டும் என்றும் அசரீரி கூறிற்று.

அசரீரி கூறியபடியே உருத்திரசன்மனை நடுவனாக வைத்துப் புலவர்கள் தங்கள் உரை களைக் கூறிவந்தனர். நக்கீரர் உரை கூறி வந்தபோதுமட்டும் உருத்திரசன்மன் ஒவ் வொரு சொல்லுக்கும் மெய்ம்மயிர் சிலிர்த்

துக் கண்ணீர் வார்த்தனன். இதனால் நக்கீரர் உரையே இறையனார் அகப்பொருளுக்கு உண்மையுரை என்று யாவருமறிந்து இன்புற்றனர்.

அக்காலத்தில் மதுரையை ஆண்டுவந்த பாண்டிய மன்னன் ஒருநாள் தனது அரண்மனை மேல்மாடியில் நின்றுகொண்டு இளந்தென்றலின் இனிமையை நுகர்ந்து கொண்டிருந்தான். அப்போது அத்தென்றலின் வழியே நறுமணம் வீசுவதை உணர்ந்த மன்னன் அது வரும் திக்கை நோக்கித் திரும்பினான். அங்குத் தன் இல்லக்கிழத்தியாம் அரசி நிற்பதைக் கண்ட பாண்டியன் அம்மணம் அவளிடமிருந்து வீசுவதை உணர்ந்தான். அரசி மீது எவ்வகையான மலர்களேனும் வேறு நறுமணப் பொருள்களேனும் இல்லாதிருந்தும் இம்மணம் எங்ஙனம் வீசியது என்று மன்னனுக்குப் பெருவியப்பு உண்டாயிற்று. மகளிர் கூந்தலுக்கு இயற்கையாகவே நறுமணம் உண்டோ என்னும் ஐயம் அவன் மனத்தில் பிறந்தது.

கலைகள் யாவற்றினும் தேர்ச்சி பெற்று விளங்கிய சங்கப் புலவர்களைத் தவிர வேறு யாராலும் தனது ஐயத்தினைத் தீர்க்க இயலாது என்று உணர்ந்தான் தென்னவன். சங்கப் புலவர்களைக் கூட்டித் தம் மனத்திருந்த ஐயத்தைத் தீர்ப்பவருக்கு ஒரு பொற்கிழியை அளிப்பதாக அறிவித்தான். சங்கப் புலவர் களாலும் மன்னன் மனத்திருந்த ஐயத்தைத் தீர்க்க முடியவில்லை.

தருமி என்னும் ஏழை அந்தணன் ஒரு வன் இறைவன் கோயிலில் நாள்தோறும் பணி யாற்றி வந்தான். அரசன் அறிவித்த பரிசைத் தான் பெற்ருல், தன் வறுமை முற்றிலும் நீங்கி மகிழலாமே என்னும் விருப்பம் அவ் வந்தணனுக்கு உண்டாயிற்று. ஆகவே, அவன் இறைவன் முன்னின்று கண்ணீர் விட்டுக் குறையிரப்பாஞயினன். கடவுளும் அவனது துயரத்திற்கு இரங்கித் தாமே ஒரு பாடல் இயற்றித் தருமிக்கு அளித்தார். அப்பாடல் ஒரு காதலன் ஒரு வண்டை நோக்கி 'மகளிர் கூந்தலின் நறுமணத்தைக்

காட்டிலும் மிகுந்த நறுமணம் வீசும் பூக்களை நீ அறிந்ததுண்டோ ?' என்று கேட்பதுபோல ஒரு கருத்தையுட்கொண்டிருந்தது. தருமி அப்பாடலை மன்னனிடம் காட்ட, அரசன் தன் ஐயம் தீர்த்த அந்தணனுக்குப் பொற் கிழியை அளிக்குமாறு உத்தரவிட்டான்.



இதுகண்ட நக்கீரர் அரசனைத் தடுத்து, "இதில் குற்றம் இருக்கிறது; ஆகை யால் இவ்வந்தணன் இப்பரிசைப் பெறுதற்கு உரியன் அல்லன்" என்றார். தருபவருக்கும்

பெறுபவருக்கும் இடையே புலவர் புகுந்து தடுத்ததைக் கண்டு பொருத தருமி ஓடோடிச் சென்று சொக்கநாதரிடம் நடந்ததைக் கூறி முறையிட்டுக்கொண்டான். தாம் இயற்றிய பாடலில் குற்றம் கூறத் துணிந்த புலவனோடு நேரில் வாதிடவேண்டும் என்று இறையனார் திருவுள்ளங்கொண்டார். ஒரு கிழவேதியர் உருவோடு அரசஅவையில் இறையனார் நுழைந்து, "இவ்வேதியன் காட்டிய பாடலில் நீர் கண்ட குற்றம் என்ன?" என்று அங்குக் கூடியிருந்த புலவர்களை வினவினார். நக்கீரர் உடனே எழுந்து, "இப்பாடல் மகளிர் கூந்தலுக்கும் மலர்களுக்கும் உள்ளதுபோல இயற்கை மணம் உண்டு என்று கூறுகிறது. இது இயற்கைக்கு மாறான ஒரு கருத்தாகையால் பொருட் குற்றமுடைய இப்பாடலுக்குப் பரிசளிக்கக்கூடாது" என்றார். இதைக் கேட்ட இறையனார், "அரசியின் கூந்தலுக்குக்கூட இயற்கை மணம் இல்லையென்று கூறுவீரா?" என்று வினவவே, "ஆம்" என்றார் புலவர். அவரை மேலும் பரிசோதிக்க விரும்பிய சோமசுந்தரக் கடவுள், "நீர் நாள்தோறும்

பூசித்து வரும் அங்கயற்கண் அம்மையின் கூந்தலுக்கும் இயற்கை மணம் இல்லை என்று தான் கூறுவீரோ ?'' என்று கேட்டார். "ஐயமின்றி அவ்வாறே கூறுவேன்'' என்ருர் நக்கீரர். அம்பிகையைப் பற்றியும் இவ்வாறு கூறத் துணிந்த புலவரின் இறுமாப்பை அடக்க இறைவன் எண்ணினுர். தமது உண்மை உருவைக் காட்டி, நெற்றிக் கண்ணுல் நக்கீரரைச் சிறிது எரித்தார். அதற்கும் அஞ்சா நெஞ்சம் படைத்த வீரப் புலவர், "நெற்றிக் கண்ணேயன்றி உமது உடலெல்லாம் என்னை எரித்தாலும், உமது பாடலில் உள்ள குற்றம் குற்றமே'' என்று துணிந்து வாதிட்டார். புலவரது அறியாமைக்கு ஆற்ருத கடவுள் அவரை அருகிருந்த பொற்ருமரைக் குளத்தில் விழுந்து தவிக்கும்படி செய்தார். கொடிய தொழுநோய் அவரை வந்து பற்றுமாறு சாபமும் அளித்துவிட்டார்.

அப்பொழுதுதான் நக்கீரருக்கு உண்மை விளங்கிற்று ; 'பெருந் தேவபாணி' என்னும் பிரபந்தத்தைப் பாடி இறைவனிடம் மன்னிப்பு

வேண்டினர். கருணைக் கடலாகிய கடவுளும் புலவரிடம் இரக்கம் கொண்டு அவரைக் கரையேற்றினர். கரையேறிய புலவர் தமது சாபத்திற்கு முடிவு கூறியருள வேண்டும் என்று இறைவனை வேண்டினர். இறைவனும் புலவரைக் கயிலையில் தம்மைத் தரிசித்துப் பாவ விடுதலை பெறுமாறு கூறி மறைந்தார்.

சங்கப் புலவர்களிடமும் அரசனிடமும் பிரியாவிடை பெற்றுக்கொண்டு கயிலையை நோக்கிப் புலவர் புறப்பட்டார். இவ்வாறு செல்லும் வழியில், ஒருநாள் திருப்பரங்குன் றத்தில் ஒரு குளத்தருகே உட்கார்ந்து கொண்டு புலவர் சிவபூசை செய்துகொண் டிருந்தார். அங்கிருந்த ஒரு பூதம் நெடு நாளாக ஆயிரம் புலவர்களை ஒரே நாளில் உண்ண வேண்டும் என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தது. அது தொளாயிரத்துத் தொண்ணூற்றென்பது புலவர்களை எவ் வாறே பிடித்து ஒரு குகையில் அடைத்து வைத்திருந்தது. நக்கீரரையும் எப்படியாவது பிடித்துக்கொண்டு போனல்தான் வயிறார

ஆயிரம் புலவர்களையும் உண்ணலாம் என்று பூதம் எண்ணியது. ஆனல் சிவபூசை செய்துகொண்டிருந்த புலவரை அணுக அதற்கு முடியவில்லை. ஆகவே புலவருடைய பூசையைக் கலைக்க விரும்பியது அப்பூதம். புலவர் எதிரிலிருந்த ஒரு மரத்திலிருந்து ஓரிலை அவர் எதிரில் விழுந்து இரண்டு பகுதிகளாகப் பிரிந்து ஒன்று மீனுகவும் மற்ருென்று பறவையாகவும் மாறி ஒன்றையொன்று பற்றி இழுக்கத் தொடங்கிற்று. இவ்வித்தையைக் கண்ட புலவருக்குச் சிவவழிபாடு சிறிது கலங்கிற்று. இது மேற்கூறிய பூதத்தின் சூழ்ச்சியாகும். உடனே பூதம் நக்கீரரையும் இழுத்துக் கொண்டுபோய்க் குகையில் அடைத்து விட்டது.

இவரைக் கண்ட ஏனைய தொளாயிரத்துத் தொண்ணூற்ருென்பது புலவர்களுக்கும் மிகுந்த வருத்தம் உண்டாயிற்று. இவர் வந்ததாலல்லவோ தங்கள் எண்ணிக்கை ஆயிரம் ஆயிற்று என்று நொந்துகொண்டார்கள். பூதம் நெடுநாள் காத்திருந்த

விருந்தை உண்பதற்குமுன் குளத்திற்குச் சென்று நீராடி வரலாம் என்று சென்றது. குகையில் அடைபட்டிருந்த புலவர்களின் நிலேக்கு இரங்கிய நக்கீரர் திருப்பரங்குன்றத்தில் கோயில் கொண்டுள்ள முருகன்மீது 'திருமுருகாற்றுப்படை' என்னும் மிக அழகிய பாடலேப் பாடினுர். இப்பாடலேக் கேட்டு உளமுருகிய முருகப்பெருமான் பூதத்தைக் கொன்று புலவர்களேச் சிறைவீடு செய்தருளினன். முன்னூற்றுப் பதினேழு அடிகள் கொண்ட 'திருமுருகாற்றுப்படை' என்னும் தோத்திரப்பாடல் தமிழிலக்கியத்திற்கே ஒரு திலகம் போல் அமைந்திருக்கிறது. இதை உள்ளன்போடு ஓதுபவர்களுக்கு முருகன் அருள் தவருது கிட்டும் என்று பெரியோர் கூறுவர்.

பிறகு நக்கீரர் திருக்காளத்தி மலேக்குச் சென்ருர்; அங்கே தெளிந்தோடும் பொன் முகலி என்னும் சுவர்ணமுகி நதியில் குளித்தார். அங்கேயே புலவருக்குக் கயிலேக் காட்சி கிடைத்தது; இறைவன் மதுரையில் அருளியபடி இவரது தொழுநோயும் இவரை

விட்டு நீங்கியது. புலவர் இறைவனது கருணைத் திறத்தை வியந்து பாராட்டிப் புகழ்ந்தார்.

சாப விடுதலை பெற்ற நக்கீரர் மறுபடியும் மதுரைக்கே வந்து சங்கத் தலைவராயிருந்து நெடுநாள் வரையில் தமிழ்த் தொண்டு புரிந்து வந்தார்.

இப்புலவரிடம் அறிவும் அன்பும் வீரமும் கருணையும் ஒருங்கு விளங்கின என்பது இவர் வரலாற்றால் நன்கு விளங்கும்.

வினாக்கள்

1. நக்கீரரது குலம், தொழில் ஆகியவற்றைக் குறிக்கவும்.
2. இறையனார் அகப்பொருள் இயற்றப்பட்ட விவரத்தையும் அதற்கு நக்கீரர் உரை இயற்றிய வரலாற்றையும் வரைக.
3. பாண்டிய மன்னனுக்கு ஏற்பட்ட ஐயம் யாது? அதனை நீக்க அவன் செய்த வழி யாது?
4. நக்கீரருக்கும் இறைவனுக்கும் இடையே நடந்த விவாதம் யாது?
5. திருமுருகாற்றுப்படை இயற்றப்பட்ட அமயம் யாது?

## 2. கம்பர்

இன்றைக்கு ஏறத்தாழ எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் தஞ்சை மாவட்டத்தி லுள்ள திருவழுந்தூரில் கம்பர் பிறந்தார். இவர் உவச்சர் குலத்தைச் சேர்ந்தவர் என்றும் காளிகோயிலில் பூசை செய்தவர் என்றும் தெரி கிறது. இவர் தந்தையார் பெயர் ஆதித்தன் என்பது. காஞ்சிபுரத்திலுள்ள ஏகாம்பரநாத ருடைய பெயரைக் குறுக்கிக் கம்பர் என்று இவர் பெற்ருேர்கள் இவரைக் குறித்தார்கள். இவர் சிறுவயதில் தம் ஆசிரியருடைய கம்பங் கொல்லையைக் காத்திருந்ததால் கம்பர் என்று பெயர் பெற்ருர் என்றும் கூறுவதுண்டு. இவ்வாறு இவர் கம்பங் கொல்லையைக் காத் திருந்தபோது, தமக்கு அறிவு மந்தமா யிருந்ததைப் பற்றிப் பலகாலும் வருந்திய துண்டு. இறுதியில் இவருக்குக் கலைமகள் அருளால் வாக்குத் திருத்தம் உண்டாயிற்று. அருமையான செய்யுட்களை நினைத்த உடனே

இயற்றும் திறமை இவருக்கு உண்டாயிற்று. கம்பருக்கு அம்பிகாபதி என்னும் பெயருடைய மகன் ஒருவனும் காவேரி என்னும் பெயரிய மகள் ஒருத்தியும் இருந்தனர்.

இவருடைய எளிய நிலையையும் அரிய அறிவையும் கண்ட திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப முதலியார் என்பவர் இவரை ஆதரிக்கத் தொடங்கினர். சடையப்ப முதலியார் புலவர்களை ஆதரிப்பதில் மிகுந்த ஆர்வம் கொண்டவர். இவ்வள்ளல் கம்பரது அறிவையும் செய்யுள் இயற்றும் திறமையையும் கண்டு வியந்து இவரே பெருங்காப்பியமாகிய இராமாயணத்தைத் தமிழில் இயற்றும் தகுதி வாய்ந்தவர் என்று கருதினர். வால்மீகியார் வடமொழியில் இயற்றியுள்ள இராமாயணத்தைத் தமிழில் ஆக்கவேண்டும் என்று கம்பரைச் சடையப்பர் கேட்டுக் கொண்டார். ஆனல், கம்பர் இம்முயற்சியில் அதிக ஊக்கம் எடுத்துக் கொள்ளாமலே காலம் கடத்தி வந்தார்.

ஒருமுறை காவிரியாறு வெள்ளம்

பெருகிக் கரைபுரண்டோடிற்று. பயிர்களுக்கும் ஏனைய உயிர்களுக்கும் பெருந்தீங்கு நேரிடும் போலிருந்தது. அச்சம் மேலிட்ட குடிமக்கள் கடவுட் புலமை வாய்ந்த கம்பரிடம் வந்து முறையிட்டுக்கொண்டனர். கம்பர் காவிரி யாற்றின் அருகில் வந்து, "தாயே! நீ நெறி தவறிச் சென்ருய் என்னும் இழிவு உனக்கு ஏற்படலாமோ? அது உலகத்திற்கே பெருந் துன்பம் தருவதாகுமே. ஆகையால் நீ கரை புரளாது கிடக்கவேண்டும்" என்று வேண் டினுர். காவிரியும் அடங்கிற்று. இதிலிருந்து கம்பரது புகழ் தமிழகமெங்கும் பரவத் தொடங்கிற்று.

கம்பர் காலத்தில் சோழ நாட்டை ஆண்டு வந்த அரசர் குலோத்துங்கர் என்பவர். அக் காலத்தில் அச்சோழனது அவைப்புலவராக விளங்கியவர் ஒட்டக்கூத்தர் என்னும் புல வர். இவர் காளியருளால் புலமைவாய்க்கப் பெற்றவர். கூத்தருக்குச் சமமான புலமை நிரம்பிய கம்பரையும் தமது அவைக்களப் புலவராக்கிக் கொள்ளக் குலோத்துங்க சோழர் விரும்பினுர்.

கவிச் சக்கரவர்த்திகளான ஒட்டக்கூத்தர், சயங்கொண்டார் முதலிய பெரும் புலவர்கள் வழிவழியே அலங்கரித்து வந்த சோழன் அவையைக் கவிச் சக்கரவர்த்தி கம்பரும் அலங்கரித்தார்.

பலமுறை வேண்டிக்கொண்டும் கம்பரும் இராமாயணத்தைப் பாடி முடிக்காமல் இருப்பதைப் பற்றிச் சடையப்ப முதலியார் அரசனிடம் கூறினர். அரசனும் அடிக்கடி கம்பரை வற்புறுத்தி வந்தான். கம்பரும் அரசனின் வற்புறுத்தலுக்கு இணங்கி இராமாயணம் பாடத் தொடங்கி உயுத்தகாண்டம் வரையிலுள்ள ஆறு காண்டங்களையும் பாடி முடித்தார். கம்பருக்கு முன்பே ஒட்டக்கூத்தர் பாடி வைத்திருந்த உத்தரகாண்டத்தையும் சேர்த்து ஏழு காண்டங்களாக இராமாயணத்தைப் பூர்த்தி செய்தார்.

கம்பர் இராமாயணத்தைத் தக்க இடத்தில் அரங்கேற்ற விரும்பினர்; அதற்குத் தகுந்த இடம் திருவரங்கம் பெரிய கோயில் தான் என்று தீர்மானித்தார். திருவரங்கத்திலுள்ள வைணவப் பெரியோர்கள் இவரு

டைய வேண்டுகோளைக் கேட்டு, "நீர் முதலில் சிதம்பரம் சென்று அங்குள்ள தில்லைவாழ் அந்தணர்களுடைய சம்மதத்



தைப் பெற்று வருவீராயின் எமக்கும் இந் நூலை ஆராய விருப்பமுண்டாம்" என்றார்கள். இவ்விடையூற்றைக் கண்ட கம்பர், "இதுவும்

நன்மைக்கேதான் போலும்" என்று தேறித் தில்லையை அடைந்தார். அங்கு இவர் பலநாள் முயன்றும், தில்லைவாழ் அந்தணர்கள் இவருடைய இராமாயணத்தை ஏறிட்டும் பார்க்கவில்லை. தற்செயலாக அவ் வந்தணர் குழாத்தில் ஒருவருடைய குழந்தை ஒன்று பாம்பு கடித்து இறந்துவிட்டது. அவ் வமயம் அங்குத் தில்லைவாழ் அந்தணர்கள் எல்லாரும் குழுமியிருந்தனர். கம்பர் அங்குச் சென்று தமது இராமாயணம் நாகபாசப் படலத்திலிருந்து சில பாடல்களைக் கூறவே, இறந்த குழந்தை தூங்கி எழுவதுபோல எழுந்து உட்கார்ந்தது. சிவனடியார்களான அவ்வந்தணர்கள் கம்பர் வாக்கின் கடவுட் தன்மையை ஒப்புக்கொண்டு கம்ப இராமாயணத்தை ஏற்றுக்கொண்டனர். இதைக் கம்பர் திருவரங்கத்திலுள்ள வைணவப் பெரியார்களிடம் கூறினர். அவர்களும் இராமாயண அரங்கேற்றத்திற்கு ஏற்பாடு செய்தனர்.

கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றும் போது, அங்குக் கூடியிருந்த புலவர்கள்

விடுத்த வினாக்களுக்கெல்லாம் ஏற்ற விடை அளித்து வந்தார். அவர்கள் விருப்பத்திற் கேற்பச் 'சடகோபரந்தாதி' என்னும் நூலையும் இயற்றினார்; இராமாயணத்திலுள்ள 'இரணியன் வதைப் படலம்' செய்யுட்களைப் பாடும் போது திருவரங்கம் கோயிலில் எழுந்தருளியுள்ள மோட்டழகிய சிங்கர் சிரக்கம்பம் செய்தார்.

இவ்வாறு இந்நூல் அரங்கேற்றி வரும் போது ஒருநாள், கம்பரை ஆதரித்த சடையப்ப வள்ளலும் சபைக்கு வந்திருந்தார். சபையில் கூட்டம் மிகுந்திருந்ததால் வள்ளலார் தமக்கு வீற்றிருக்க இடமின்றித் தொலைவில் ஒருபுறமாக உட்கார்ந்தார். தன்னை ஆதரித்த வள்ளலுக்குத் தக்க நன்றி பாராட்டாமல் இருந்ததைப் பற்றிச் சிலர் கம்பரிடம் கூறவே, அவர், "இருப்பினும் என் ? எமது சடையப்ப வள்ளலாரை வைக்க வேண்டிய இடத்தில் வைக்கிறேன்" என்றார். அவ்வாறே இராமாயணத்தில் நூறு பாடல்களுக்கோர் இடமாக வள்ளலாரைப் புகழ்ந்து பாடினார். இதனால் சிலர் கம்பர் நரத்துதி

செய்துவிட்டதாகக் கூறி வாதிட்டனர்; அதற்குக் கம்பர், "ஆம், நான் செய்தது தவறுதான்; சடையப்பரை நூற்றிலொருவராக நான் மதித்திருக்கக் கூடாது; அவர் ஆயிரத்திலொருவர் அன்ரோ?" என்று கூறிச் சடையப்ப முதலியாரைப் பற்றிய புகழ்ச்சியை ஆயிரம் பாடல்களுக்கு ஒரு முறை அமைத்தார். இராமாயணத்தின் அருமை பெருமைகளை உணர்ந்த சான்ரோர்கள் கம்பருக்குக் 'கவிச் சக்கரவர்த்தி' என்னும் பட்டம் அளித்தனர்.

கம்பர், தம் காலத்தில் சோழன் அவையை அலங்கரித்திருந்த ஒட்டக்கூத்தரோடும் ஒளவையார் முதலியவர்களோடும் அளவளாவிப் பழகி, இலக்கிய இன்பக் கடலில் திளைத்திருந்தார்.

சோழன் கம்பருக்குப் பெரும் சிறப்புக்கள் எல்லாம் செய்தான். கம்பர் சென்ற இடம் தோறும் அவர் காண்பனவான சோலை, சாலை முதலானவற்றையெல்லாம் அவருக்கு உரிமை செய்தான்.

ஒருமுறை, குலோத்துங்க சோழன் கம்ப ரிடம் "இந்நாடும், இந்நாட்டில் உள்ளன யாவும் எமக்கு அடக்கம்" என்று கூறினன். அவன் அறியாமையைக் கண்ட கம்பர், "ஆயினும் நீர் எமக்கு அடக்கம்" என்ருர். இது கேட்டு முனிந்த சோழன் கம்பரை எவ்வாறேனும் மானக்குறை செய்ய வேண் டும் என்று எண்ணினன். தன் காதற் கிழத்தியான பொன்னி என்பாள் மூலம் 'தாசி பொன்னிக்குக் கம்பன் அடிமை' என்று கம்பரிடமே எழுதி வாங்கிவரச் செய் தான். கம்பர் இதற்குத் 'தாயாகிய அழகிய திருமகளுக்குக் கம்பன் அடிமை' என்று பொருள் கூறிவிட்டார். இதனல் சோழனுக் குக் கோபம் மூண்டது; கம்பரை நாடு கடத்தி விட்டான். கம்பரும், "கற்றவனுக்குச் சென்ற விடமெல்லாம் சிறப்புண்டு" என்று கூறிச் சோழநாட்டை விட்டகன்று சிலகாலம் சேர நாட்டில் வசித்து வந்தார்.

பிறகு பாண்டி நாடு சென்று தென்னவன் அவையில் சிறப்போடு வீற்றிருந்தார். அதன் பின் கம்பர் சிலகாலம் வாரங்கல் நாட்டு மன்ன

ஞன பிரதாபருத்திரன் என்பவன் அவையில் இருந்து அவனுக்கு இலக்கியப் பெருந் துணையாயிருந்தார். தான் இட்ட ஏவல் எல்லாம் அவன் கேட்கும் பெருமையையும் கம்பர் பெற்ருர். ஓரமயம் சோழன் அவைக்கே பிரதாபருத்திரனைத் தன் ஏவலாளாகக் கூட்டிச் சென்ருர். புலவரது பெருந் திறமையைக் கண்டு சோழன் அஞ்சினன். ஒரு மதயானையை ஏவி அவரைக் கொலை செய்விக்கவும் சூழ்ச்சி செய்தான். கவிஞர், நரசிங்கப்பெருமானை வாழ்த்தி யானையைக் கொன்ருர். இதனுல் மனம் வெருவிய அரசன் தானே அம்பு எய்து கம்பரைக் கொன்றுவிட்டதாக ஒரு வரலாறு உண்டு.

கம்பர் இறந்தபோது தமிழ்த்தாய் தன் அருமை மகனை இழந்து நின்ருள். தமிழகம் துயரத்தில் ஆழ்ந்து தவித்தது.

'கல்வியிற் பெரியவர் கம்பர்', 'கம்பர் வீட்டுக் கட்டுத் தறியும் கவி சொல்லும்', 'கவிச் சக்கரவர்த்தி கம்பர்' முதலிய பட்டப்

பெயர்கள் கம்பரது பெருமையை நன்கு விளக்குவனவாம்.

இவருடைய இராமாயணத்திற்கு 'இராமாவதாரம்' என்பது இவரிட்ட பெயர். இந்நூல் உலகப் பேரிலக்கியங்களில் ஒன்று. இது பன்னிரண்டாயிரம் இனிய பாடல்கள் கொண்ட பெருங்காப்பியம். தமிழர் உண்மையிலேயே பெருமைப்படக்கூடிய உடைமைப் பொருள் ஒன்று உண்டாயின் அது கம்பரது இராமாயணம் என்று ஐயமின்றிக் கூறலாம்.

## வினாக்கள்

1. கம்பரை ஆதரித்த வள்ளல் யார்? அவரைக் கம்பர் எங்ஙனம் பெருமைப் படுத்தினர்?
2. கம்பர் தம் இராமாயணத்தை அரங்கேற்றத் தொடங்கியபோது உண்டான இடையூறுகள் எங்ஙனம் நீங்கின?
3. 'தாசி பொன்னிக்குக் கம்பன் அடிமை' என்னும் தொடருக்குக் கம்பர் கூறிய பொருள் யாது?
4. கம்பர் மதயானையிடமிருந்து எப்படித் தப்பினர்?
5. கம்பருக்கு வழங்கிய பட்டப்பெயர்கள் யாவை?

## 3. சேக்கிழார்

சிவனடியார்கள் அறுபத்து மூவரின் உண்மை வரலாற்றினை நமக்குத் தந்துள்ளவர் சேக்கிழார் நாயனார் என்னும் புலவர் பெருமான். தொண்டை நாட்டிலுள்ள இருபத்து நான்கு கோட்டங்களில் புலியூர்க் கோட்டம் என்பது ஒன்று; இதில் குன்றத்தூர் நாடு என்று ஒரு நாடு உண்டு; இந்நாட்டில் குன்றத்தூர் என்னும் ஊர் சிறந்த ஊராம். இவ்வூரில் சேக்கிழார் என்னும் வேளாண் குடியில் நமது புலவர் பிறந்தார். இவருக்கு அருண்மொழித் தேவர் என்று பெயர். இவரது குடிப் பெயரையிட்டு இவரைச் சேக்கிழார் என்றழைத்தல் மரபு. இவருக்குப் பாலறுவாயர் என்னும் பெயருடைய தம்பி ஒருவர் உண்டு. சேக்கிழார் இளம் வயதிலேயே கல்வியைக் கசடறக் கற்றுத் தமிழறிவிலும் சிவபக்தியிலும் சிறந்து விளங்கினார்.

இன்றைக்கு ஏறக்குறைய எண்ணூறு

ஆண்டுகளுக்கு முன், அதாவது சேக்கிழார் வாழ்ந்து வந்த காலத்தில், சோழநாட்டை அநபாய சோழர் என்னும் பெயர் பெற்ற குலோத்துங்க சோழர் ஆண்டு வந்தார்.

இச்சோழ அரசர் ஒருநாள் சேக்கிழாரது தந்தையாராகிய குன்றத்தூர்கிழாரை விளித்து "உலகப்பொருள்களுள் எது பெரியது?" என்று வினவினர். இதற்கு எளிதில் விடை அளிக்க இயலாமல் வருந்திய குன்றத்தூர் கிழார் தம் மனையை யடைந்து கவலைகொண் டிருந்தார். இதைச் சேக்கிழார் கண்டு, நடந்த வற்றையெல்லாம் தம் தந்தை வாயிலாக உணர்ந்தார். "அரசன் வினவிற்கு விடை இப்பொழுதே அளிக்கிறேன்" என்று கூறி 'காலத்தினாற் செய்தநன்றி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப் பெரிது' என்னும் திருக் குறளை எழுதிக் கொடுத்தார். தந்தையார் இதைக்கொண்டுபோய் மன்னனிடம் காண் பிக்கவே, அவரும் களிப்பெய்தினர். அன்றி யும் குன்றத்தூர் கிழார் மூலம் சேக்கிழாரது பெருமையைக் கேள்வியுற்ற அரசர் அவ

ரைத் தமது மந்திரியாக்கிக்கொண்டார். சேக்கிழார் சோழனுக்கு அமைச்சுப் பூண்டு அத்தொழிலைத் திறம்பட நடத்தி வந்தார்.

சேக்கிழாருக்குச் சிவபக்தி மிகுதியாக இருந்தது; திருநாகேசுவரத்தில் எழுந்தருளியுள்ள இறைவனிடம் பெருந்தொண்டு பூண்டு அவ்வூர்க் கோயிலில் திருப்பணிகள் பல செய்வித்தார்; திருப்பணிகளின் பொருட்டுத் தமது செல்வத்தின் பெரும் பகுதியைச் செலவிட்டார்.

இவ்வாறிருக்குங்கால், அநபாய மன்னரும் அந்நாட்டு மக்களும் கல்வியறிவிற் சிறந்து விளங்கியவர்களாதலின் பல அரிய நூல்களைக் கற்று இலக்கிய இன்பத்தை முற்றும் துய்த்து வந்தனர். அவ்வாறு அவர்கள் மிக விரும்பிப் படித்த நூல்களில் தலைசிறந்தது சீவக சிந்தாமணி என்னும் பெருங்காப்பியமேயாகும். திருத்தக்கதேவர் என்னும் முனிவர் இயற்றியுள்ள இந்நூல் இலக்கியச் சுவைகள் பலவும் செறிந்திருப்பதால், எல்லாரும் இந்நூலை விரும்பி ஆராய்

வதையே தமக்குப் பெரும் பொழுதுபோக் காகக் கொண்டிருந்தனர்.

இது கண்ட சேக்கிழார் மனம் மிக நொந் தார். இவர் சைவராதலால், சிவகதைகளை ஆராய்வதே இம்மை மறுமைகளுக்குப் பயன்தரும் செயல் எனக் கருதி, அரசரிடம் தமது கருத்தைத் தெரிவித்தார்.

இதைக் கேட்ட அரசர், "அமைச்சரே! நீர் கூறுவது முற்றிலும் உண்மையேயாயினும், சிவனடியார்களது வரலாறுகளை நாம் எப்படி அறிவோம்; அவர்களுடைய வரலாற்றினை ஒரு பேரிலக்கியமாக யாரேனும் இயற்றி உல கிற்கு அளிப்பார்களாயின், அது சிந்தாமணி யில் மக்களுக்கு உள்ள ஆர்வத்தைக் குறைப்பதோடு சிவபக்தி குன்றிப் போயிருப் பதையும் சீர்திருத்தக்கூடும்" என்றார். இதைச் செவிமடுத்த சேக்கிழார் சிவனடியார் களது வரலாற்றினை மிகச் சுருங்கிய முறையில் 'திருத்தொண்டத் தொகை' என்னும் பதிகத் தில் சுந்தரமூர்த்தி அடிகள் உலகினர்க்கு எடுத்துரைத்துள்ளார் என்பதையும், பிறகு

அவ்வடியார்களது பெருமைகளை ஓரளவு விரிவாகத் 'திருத்தொண்டர் திருவந்தாதி' என்னும் நூலில் நம்பியாண்டார் நம்பி என்னும் சிவனடியார் பாடியுள்ளார் என்பதையும் அரசருக்கு விரித்துக் கூறினர். இதைக் கேட்ட அநபாய சோழர், "அவ்வாருயின் நம்பியாண்டார் நம்பிகள் கூறியுள்ள வரலாற்றை நீரே ஒரு பெரிய புராணமாகச் செய்து உலகினரை உய்விக்க வேண்டும்'' என்று அருண்மொழித் தேவரை வேண்டிக் கொண்டார்.

அரசர் வேண்டுகோளுக்கு இசைந்த அமைச்சர் அரசரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு சிதம்பரத்திற்குச் சென்ருர். சிதம்பரத்திலிருந்துகொண்டு திருத்தொண்டர் புராணம் இயற்றுவதற்குச் சென்ற அருண்மொழித் தேவருக்குப் பொருள் முதலிய தேவைகளில் ஒரு குறையும் நேரிடாவண்ணம் சோழவரசர் கவனித்துக்கொண்டார்.

தில்லையை அடைந்த சேக்கிழார் நேரே

கோவிலிற்குச் சென்று நடராசப்பெருமான் திருமுன்பு வணங்கியெழுந்து தாம் சிவனடியார் புராணத்தைப் பெருங்காப்பியமாக இயற்றக் கொண்ட கருத்தை முறையிட்டுக் கொண்டார். அப்போது அம்பலவாணர் அருளினல் 'உலகெலாம்' என்ற பேரொலி எழுந்தது. அது கேட்ட தில்லை வாழ் அந்தணர்களும் ஏனையோரும் சிற்றம்பல வாணரையும் அருண்மொழித் தேவரையும் வணங்கி மகிழ்ந்தனர். சேக்கிழார் சிதம்பரம் கோயிலிலுள்ள ஆயிரக்கால் மண்டபத்தை அடைந்து இறைவன் திருவருளைப்போற்றி நடராசப் பெருமானது அருளால் பெற்ற சீரையே முதல் சீராகக்கொண்டு, அன்று முதல் தொண்டர் புராணத்தைப் பாடத் தொடங்கினர்; இவ்வாறு சேக்கிழார் தில்லையில் புராணம் இயற்றிக்கொண்டிருந்தபோது, அரசர் பலகாலும் தம் மந்திரிப் பிரதானிகள் மூலம் புராணம் எவ்வளவு வரையில் ஆகியிருக்கிறது என்று கேட்டுக்கொண்டேயிருந்தார். முறையே சின்னுட்களில் நூலும் இனிது முடிவுற்றது. இப்புராணமே 'திருத்தொண்

டர் புராணம்' என்றும் 'பெரிய புராணம்' என்றும் பெயர் பெறும்.

புராணம் முற்றுப் பெற்ற செய்தியைக் கேட்ட அரசரது பெரு மகிழ்ச்சிக்கு ஓர் அளவின்று; செய்தி வந்து கூறியவர்களுக் கெல்லாம் எண்ணிறந்த சிறப்புக்களைச் செய்தார்.

அரசரும் ஏனையோரும் தம் பரிவாரங் களோடு புறப்பட்டுத் தில்லையை அடைந் தனர்; இறைவன் திருமுன்பு அடைந்து வணங்கினர். இறைவனது திருவாக்கின்படி எழுதி முற்றுவிக்கப் பெற்ற புராணத்தை வணங்கிக் கேட்கும்படி அரசருக்கு ஒரு கட்டளையுண்டாயிற்று. அரசரும் உவந்து புராணம் அரங்கேற்றுகையில் வந்திருந்து கேட்டு மகிழும்படி பல திசையிலுள்ளார்க் கும் ஓலை போக்கினர்.

கனக சபைக்கு முன்பு திருத்தொண்டர் புராணம் அரங்கேற்றப்பட்டது. இவ்வரங் கேற்றம் முற்றுப் பெற ஏறக்குறைய ஓராண்டு ஆயிற்று. அரசர் புராணத்தையும் சேக்கிழா

ரையும் யானைமீது ஏற்றுவித்து ஊர்வலம் செய்வித்தார். பின்பு அரசர் சேக்கிழாருக்குத்



'தொண்டர் சீர் பரவுவார்' என்னும் திருநாமம் சூட்டினார்.

சேக்கிழாரது தம்பியாகிய பாலறாவாயரை 'தொண்டைமான்' என்னும் நாமம் சூட்டி அமைச்சுத் தொழில் மேற்கொண்டு வாழும்படி அநபாய சோழர் வேண்டிக் கொண்டார். அவரும் அமைச்சுப்பூண்டு நீண்டநாள் தொண்டாற்றிவந்தார். அவருக்

குத் 'தொண்டைமண்டலம் நின்று காத்த பெருமான்' என்னும் பெயர் உண்டாயிற்று.

பிறகு நீண்ட நாள் சிவ சரிதங்களை ஆராய்ந்திருந்து, சேக்கிழார் நாயனர் இறைவன் திருவடி நீழலை அடைந்தார். இவர் இயற்றிய 'திருத்தொண்டர் புராணம்' தமிழில் கம்பராமாயணத்திற்குச் சமமாகக் கருதப் படுவது; ஏறத்தாழ நாலாயிரத்து ஐந்நூறு மிக இனிய பாடல்களைக் கொண்டு திகழ்வது. கற்பனைகளும், வருணனைகளும், சொல்லாக்கமும், பொருட் செறிவும், பக்திப் பெருக்கும், சமய வரலாறுகளும் இந்நூலகத்தே திகழ்வது யாவருக்கும் பேரின்பம் அளிப்பதாகும்.

இந்நூல் சுந்தரமூர்த்தி நாயனரது திருத்தொண்டத் தொகையையும் நம்பியாண்டார் நம்பிகளது திருத்தொண்டர் திருவந்தாதியையும் அடிப்படையாகக்கொண்டு வழிநூலாகவும் விரிநூலாகவும் இயற்றப் பெற்றது; இது சைவப் பேரிலக்கியங்களில் ஒன்ருக விளங்குகிறது; பக்திச் சுவையும் ஒருங்கே திகழ்வது

இந்நூலகத்தே போல எந்நூலகத்தும் இல்லை என்று அறிஞர் கூறுவர்.

## வினாக்கள்

1. 'உலகப் பொருள்களுள் பெரியது எது?' என்பதற்குச் சேக்கிழார் கூறியது யாது?
2. சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தை இயற்றக் காரணம் என்ன?
3. சேக்கிழார் புராணத்தை இயற்றத் தொடங்கிய போதும், இயற்றி முடித்தபோதும் நிகழ்ந்தவை யாவை?
4. திருத்தொண்டர் புராணத்திற்கு ஆதாரமாயிருந்த நூற்கள் யாவை?

## 4. வில்லிபுத்தூரார்

ஒரு மொழியில் ஏற்படக்கூடிய நூல்கள் பொதுவாக இருவகைப்படும். ஒன்று தமிழ்ப் புலவர்கள் தமது கற்பனையால் புனைந்து இயற்றும் நூல்கள்; மற்றொன்று புலவர்கள் பிறமொழிப் பெரு நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து ஆற்றும் நூல்கள். இவ்வாறு தமிழில் மொழிபெயர்த்துச் செய்யப்பட்டுள்ள வடமொழி நூல்களில் தலைசிறந்தவை இராமாயணமும் மகாபாரதமுமாம். இராமா யணத்தைக் கம்பர் தமிழில் ஆக்கித் தந்தார். பாரதத்தைப் பலர் தமிழாக்கியுள்ளாரேனும், வில்லிபுத்தூரார் என்பவர் செய்துள்ள பாரதமே மிகவும் சிறந்ததாக விளங்குகிறது.

இவர் திருமுனைப்பாடி நாட்டில் சனியூர் என்னும் ஊரில் பிறந்தார். இவரது தந்தை யார் பெயர் வீரராகவாச்சாரியார் என்பது. இவர் வைணவ மதத்தைச் சார்ந்தவர். ஸ்ரீவில்லிபுத்தூர் என்னும் திருநகரத்திலே முன்பு பெரியாழ்வார் என்னும் பக்தர் ஒருவர்

இருந்தார். அவருக்கு வில்லிபுத்தூராழ்வார் என்று பெயர். அவ்வாழ்வாரது பெயரையே வீரராகவாச்சாரியார் தமது புதல்வருக்கும் இட்டனர்.

இவருக்கு இளம்பருவத்திலிருந்தே தமிழில் தெளிந்த அறிவும் கவிபாடும் திறமையும் உண்டாயின. சேரனது அவைக்களத்தை இவர் அவைப் புலவராக வீற்றிருந்து அலங்கரித்தார். இவரது கல்வியறிவின் மேம்பாடு தென்னுடெல்லாம் பரவிற்று; பொதுவாகத் தமிழ்க் கவி இயற்றுவதில் சிறந்த தேர்ச்சி பெற்றவராயினும் அதிலும் சந்தப் பாக்களைப் பாடுவதில் நிகரற்று விளங்கினர்.

கல்விச் சிறப்பால் பெருமையுற்று விளங்கினராயினும், இவருக்குத் தாம் கல்வியிற் சிறந்துள்ளோம் என்னும் செருக்கும் ஓரளவு இருந்தது. அச்செருக்கால், அரச அவைக்கு வரும் புலவர்களையெல்லாம் இவர் வாதுக்கு அழைப்பது மரபாம். இவரது இயல்பையும் ஆற்றலையும் அறியாத புலவர்கள் யாரேனும் இவரோடு வாதிடத் துணிந்தால், வில்லிபுத்தூரார் தமது ஆற்றலால் அவர்களைச் சொற்

போரில் புறங்காட்டச் செய்து அவமானம் செய்வது வழக்கம். அதோடு நில்லாமல், ஒரு குறட்டால் தோற்ற புலவர்களுடைய காதுகளை அறுத்துவிடுவதுமுண்டாம். இக் கொடிய செயல் புரிந்து வந்த புலவரை நெருங்கி வாதிட எவர்க்கும் அச்சமாயிருந் தது. இவரது தன்மையை அறிந்த புலவர்கள் யாவரும் இவர் இருக்கும் திக்கு நோக்கவும் அஞ்சினர். இதை உணர்ந்த வில்லிபுத்தூரார் தாமே தமிழ்நாட்டின் பல பாகங்களுக்கும் சென்று புலவர்களைத் தேடிப் பிடித்து வாதிட்டு அவர்கள் காதை அறுக்கப் புறப்பட்டார்; தமிழ்நாடெங்கும் சுற்றி வந் தார்.

இவ்வாறு வருங்கால் ஒருநாள், அனந் தன் என்னும் புலவன் வில்லிபுத்தூராரின் இயல்பை அறியாதவனாய் இவரிடம் அகப்பட் டுக் கொண்டான். புலவரும் தமது புலமைத் திறத்தால் அனந்தனை வெற்றி கொண்டு, வழக்கம்போல அனந்தனுடைய காதை அறுக்க முற்பட்டார். கவிபாடும் திறமை குறைவாயிருந்தபோதிலும் திறமையாக உரை

யாடுவதில் வல்லமை பெற்றிருந்த அனந்தன் 'ஆதிசேடனுக்குக் காது இல்லையே' என்ருன். ஆதிசேடனுக்கும் அனந்தன் என்னும் பெயருண்டு. பாம்பிற்குக் காது இல்லை என்பது யாவருமறிந்தது. இக் கருத்தையே அனந்தன் இவ்வாறு கூறினுன். அப்புலவனது அறிவிற்கு மெச்சிய வில்லிபுத்தூரார் அவன் காதை அறுக்காமல் விட்டு விட்டார்.

அங்கிருந்து புறப்பட்ட வில்லிபுத்தூரார் பல ஊர்களையும் சுற்றித் திருவண்ணுமலைக்கு வந்து சேர்ந்தார். அங்குள்ள தமிழ்ப் புலவர்கள் எல்லாரும் இவர் வருகையை அறிந்து அஞ்சி ஓடினர். அக்காலத்தில் முருகனடியார்களில் தலைசிறந்த அருணகிரியார் திருவண்ணுமலையில் இருந்தார். புலவர்கள் அஞ்சியோடுவதைக் கண்ட அருணகிரியார் அவர்களை நோக்கி, "ஏன் இப்படி அஞ்சுகிறீர்கள் ?" என்று கேட்டார். அவர்களும், "வில்லிபுத்தூரார் என்னும் பெரும் புலவர் வந்துள்ளார்; அவரோடு வாது செய்து தோற்பாரது காதுகளை அறுத்து

விடுவது அவர் மரபு ; ஆதலால் எங்களுக்கு அச்சமாயிருக்கிறது'' என்றனர். அருணகிரியாரும் அவர்களுடைய அச்சத்தை நீக்கத் தாமே வில்லிபுத்தூராரோடு வாதம் செய்யப் புறப்பட்டார். இருவருக்கும் வாதம்



நிகழ்ந்தது. தோற்றவர் மற்றவர் காதை அறுத்துவிடுவது என்று ஏற்பாடாயிற்று. இறுதியில் அருணகிரியாரது 'கந்தரந்தாதி'க்குப் பொருள் கூறத் தவறிய வில்லிபுத்தூரார் தோற்றதாக ஏற்பட்டது. வில்லிபுத்தூரார்

தம் கையிலிருந்த குறட்டை அருணகிரி யாரிடம் கொடுத்துவிட்டார். ஆனால் அருண கிரியார், "நான் உமது காதை அறுக்கப் போவதில்லை; அதற்குப் பதிலாக நீர் இனி எப்புலவரையும் துன்புறுத்துவது இல்லை என்று உறுதிமொழி தரவேண்டும்" என்று கேட்டு உறுதிமொழி பெற்றுக்கொண்டார். வில்லிபுத்தூரார் தம் செயலின் தவற்றை உணர்ந்தாரேனும் தமக்கு ஏற்பட்ட அவ மானத்தை மறக்கவேயில்லை.

திருவண்ணாமலையைவிட்டு நீங்கிப் பல் லக்கில் சென்று கொண்டிருந்த வில்லிபுத்தூ ராருக்கு அவ்வூர்க் கோயிலின் கோபுரத்தைப் பார்க்க விருப்பமில்லை. எனவே, அவர் தம் கண்களை மூடிக்கொண்டார். உடனே அவர் கண்கள் இரண்டும் குருடாகி விட்டன. பிறகு அவர் அருணகிரியாரைக் குறையிரந்து தமது பார்வையைத் திரும்பவும் பெற்றார்.

வில்லிபுத்தூரார் மறுபடியும் தம் நாட்டை அடைந்து, அவைப் புலவராக வீற்றிருந்து தமிழ்ப் பணிபுரிந்து வந்தார்.

இப்புலவருக்கு வரந்தருவார் என்னும் பெயருள்ள புதல்வர் ஒருவர் உண்டு. அவரைச் சிறுவயதிலேயே கல்விக்கு உதவாதவர் என்று தந்தையார் கடிந்து கொண்டதன் காரணமாக, அவர் தந்தையார் இல்லத்தை விட்டு நீங்கி வேற்றிடம் சென்று விட்டார். சென்றவிடத்தில் தக்க ஆசிரியர்களை அடைந்து வரன்முறையாகக் கல்வியைக் கற்றுத் தேர்ந்தார்.

இவ்வாறிருக்குங்கால், வில்லிபுத்தூராருக்கும் அவரது தம்பிக்கும் குடும்பத்தின் உடைமை சம்பந்தமாகப் பகைமை மூண்டது. தம்பி, வில்லிபுத்தூரார் தமக்குச் சரிவரத் தாயபாகம் அளிக்க மறுக்கிருர் என்று அரசரிடம் முறையிட்டுக்கொண்டார். இவர்களுக்குள் ஏற்பட்ட சச்சரவைத் தீர்ப்பதற்கு அரசர் ஒரு வழி கண்டுபிடித்தார்; தம்பியைப் போகச் சொல்லிவிட்டுப் புலவரை வரச் சொல்லி அனுப்பினுர். புலவர் வந்ததும் அவரிடம் தாயபாகத்தைப் பற்றிப் பேசாமல், "புலவரே! உமது பெருமையையும் புலமையையும் நாடு அறிந்தவையாகை

யால், நீர் வடமொழியில் வியாசர் இயற்றி யுள்ள மகாபாரதத்தைத் தமிழில் மொழி பெயர்த்தல் வேண்டும்" என்று அரசர் கேட்டுக்கொண்டார். புலவரும், "இறை வன் திருவுள்ளம் அதுவாயின் ஆகுக" என்று கூறிப் பாரதத்தைத் தமிழில் மொழிபெயர்த் தார். வில்லிபுத்தூராருக்கு முன்பு பெருந் தேவனுர், நல்லாப் பிள்ளை முதலிய புலவர்கள் பாரதத்தைத் தமிழில் ஆக்கியிருந்தனர்; ஆயினும் அவைகளில் பெரும் பகுதி காலவாய்ப்பட்டு மறைந்து போகவே, வில்லி புத்தூரார் பாரதம் ஒன்றே தமிழில் ஏறக் குறையப் பூர்த்தியாக உள்ள நூலாயிற்று. இவ்வளவு அழகிய நூலை வில்லிபுத்தூரார் இயற்றிக்கொண்டு வந்து அரசரிடம் காட்டி னர். பார்த்த மன்னர் மிகவும் மகிழ்ச்சி அடைந்து வில்லிபுத்தூராரை உச்சி மேற் கொண்டு மெச்சினர்.

எனவே, இந்நூலை அரங்கேற்ற அரசர் எண்ணம் கொண்டு ஒரு நன்னாளில் அதற் கான ஏற்பாடுகளைச் செய்தார். ஆசிரியர் நூலை அரங்கேற்றி வருகையில் மாறுவேடம் தரித்து

அவர் அவையில் வீற்றிருந்த ஆசிரியர் புதல்வர் வரந்தருவார், தம்முடைய புலமையால் தம்மைப் புலப்படுத்திக்கொண்டார். தந்தையாரும் புதல்வரை ஏற்றுக்கொண்டு மனம் மகிழ்ந்தார். புலவர் தம்மை ஆதரித்த கொங்கர் குலபதி வரபதி ஆட்கொண்டானை அந்நூலகத்தே பல இடங்களில் புகழ்ந்து பாடியிருக்கிறார். இது புலவரது நன்றி மறவாத பண்பினை நன்கு விளக்கும்.



இந்நூற் செய்யுட்கள் மிகவும் இனிமையானவை; சந்தப் பாடல்கள் மிக அழகாகப் பாடப் பெற்றவை. இவர் வைணவராய் இருந்தபோதிலும் 'அருச்சுணன் தவநிலைச் சருக்கம்' போன்ற பகுதிகளில் சிவபெருமானையும் புகழ்ந்து பாடியுள்ளார். இது பிற்காலத்தில் இவர் மதவேறுபாடுகளை அதிகமாகப் பாராட்டவில்லை என்பதை விளக்குகிறது. பாரதத்திற்கு விநாயகர் காப்பு இவர் கூறியிருக்கிறார்.

இஃது இவ்வாறாக, புலவரது தம்பி மறுபடியும் அரசரிடம் வந்து தாயபாகத்திற்கு

முறையிட்டான். அரசர் புலவரைக் கூப்பிட்டு வினவவே, அவரும் வாதிட்டார். அரசர் புலவரை நோக்கி, "புலவரே! நீரோ பாரதம் பாடியவர்; தாயபாகம் கொடாது மறுத்த துரியோதனனது வரலாற்றை உலகத்தவர் அறிந்து உய்யுமாறு பெருங்காப்பியம் இயற்றியவர். நீரே உமது தம்பிக்குத் தாய பாகம் தர மறுத்தால் உலகு நகையாடாதோ?" என்றார். இதைக்கேட்ட புலவர் வெட்கித் தலை குனிந்தார்; இல்லறத்தில் வெறுப்புக் கொண்டார்; திருவரங்கம் சேர்ந்து அத்திரு நகரில் இருந்துகொண்டு அரங்கநாதருக்குரிய திருப்பணிகளைப் புரிவதில் தமது வாழ்நாளைச் செலவிட்டு வந்தார்.

## வினாக்கள்

1. வில்லிபுத்தூரார் தம்மிடம் தோற்ற புலவர்களை எங்ஙனம் மானக்குறை செய்தார்?
2. அனந்தன் என்னும் புலவன் அவரிடமிருந்து எங்ஙனம் தப்பினான்?
3. வில்லிபுத்தூராரை வென்று மன்னித்த புலவர் யார்?
4. வில்லிபுத்தூரார் பாரதம் இயற்றிய அமயம் யாது?
5. வில்லிபுத்தூராருக்கும் அவரது தம்பிக்குமிடையே ஏற்பட்ட தாயபாக வழக்கு எங்ஙனம் தீர்க்கப் பட்டது?

# 5. குமரகுருபரர்

பாண்டியநாடு தமிழைப் போற்றி வளர்த்த நாடு. பொதியத்திலே பிறந்து வையையிலே தவழ்ந்து தென்னவன் ஆதரிப்பிலே வளர்ந்தவள் தமிழ்த்தாய். 'பாண்டிய நாடு தமிழுடைத்து' என்பது ஆன்றோர் வாக்கு. பல தமிழ்ப் புலவர்கள் இப்பாண்டி நன்னாட்டில் தோன்றியுள்ளார்கள். அவர்களில் குமரகுருபர அடிகளும் ஒருவர். கவிகளில், ஆசானிடம் நூல் கற்றுக் கல்வியறிவில் மேம்படுதலால் கவிபாடும் புலவர்களும் உண்டு; தமது பக்தித் திறத்தால் இறைவனது கருணைக்குப் பாத்திரமாவதன் மூலம் அருட்கவிகளாம் புலவர்களும் உண்டு. குமரகுருபரர் ஓர் அருட் கவிஞர்.

குமரகுருபரர் பாண்டிய நாட்டில் ஸ்ரீவைகுண்டம் என்னும் திருப்பதியில் பிறந்தார். இவர் சண்முகசிகாமணிக் கவிராயர்

என்பாருக்கும் சிவகாம சுந்தரியார் என்னும் அவர் இல்லக்கிழத்தியாருக்கும் தவப்புதல்வ ராகப் பிறந்தார். பெற்ருேர்கள் நெடுநாட் களாகத் தமக்கு மகப்பேறின்மையால் வருந்தி முருகக் கடவுளை நாள்தோறும் தொழுது வணங்கிவந்தனர். இறைவன் அருளால் பிறந்த குமரகுருபரர் ஐந்து ஆண்டுகள் வரையில் பேசவே இல்லை. யாவரும் இக் குழந்தையை மூங்கை என்றனர். பலர் பல வாருகக் கூறவே, கவிராயர் திருச்செந் தூருக்குச் சென்று அங்கு முருகன் திருமுன்பு குழந்தையை விட்டுத் தாம் நாற்பது நாள் கடுநோன்பு இருக்கத் தீர்மானித்தார்; அந்நோன்பின் முடிவில் மகன் பேசானுயின் பெற்ருேர்கள் இருவரும் கடவுள் திருமுன்பு தங்கள் உயிரைப் போக்கிக்கொள்வதாக உறுதி பூண்டனர். இதன்படி கவிராயர் மனைவியோடும் மகனேடும் திருச்செந்தூரை அடைந்தார்.

முன்னேற்பாட்டின்படி கவிராயரும் அவ ரது மனைவியாரும் நாற்பதுநாள் நோன்பு காத்தனர். தனது அடியாருடைய நிலைக்கு

இரங்கி முருகன் மூங்கைப் பிள்ளைக்குப் பேச்சுத் திறமையை அளித்தார். பேரறிவும், உள்பொருள் இல்பொருள் வேறுபாட்டுணர்வும், இன்கவி இயற்றும் ஆற்றலும் அப்பொழுதே இவருக்கு அமைந்தன; முருகக் கடவுளே இப்பிள்ளைக்குக் 'குமரகுருபரன்' என்று திருநாமம் இட்டார். பெற்றோர்கள் இன்பப் பெருங் கடலில் திளைத்து வழிபடு தெய்வத்தை வாயார வாழ்த்தினர்.

சில்லாண்டுகள் கழித்துக் குமரகுருபரருக்கு ஓர் இளவல் தோன்றினான்; அவனும் நாளடைவில் தமிழ்ப் புலமை நிறைந்து விளங்கினமையால், 'குமார கவி' என்னும் பெயர் பெற்றான். குமரகுருபரர் இயல்பிலேயே துறவை விழைந்தார்; வாழ்நாள் முழுவதும் துறவியாகவே இருந்தார். இவர் பாடிய பாடல்களெல்லாம் தேனென இனித்தன; ஆற்று நீர் என ஒழுகின. எளிதில் பொருள் விளங்கும்படி செஞ்சொற்களை அமைத்து அருட்பாக்கள் விரைவில் அனேகம் இயற்றும் இயல்பினராய நம் புலவர் பெருமான் புகழ் யாண்டும் பரவியது. இவர்

இயற்றும் பாக்களை இவர் தம்பி குமார கவிகளே ஏடெழுதி வருவது வழக்கம்.

குமரகுருபரர் தன்னைக் கடைக்கணித்த அருட்பெரு வள்ளலாம் வள்ளி மணாளனைக் குறித்து உள்ளம் கனிந்துருகிப் பாடித் துதித்தார். இதுவே 'கந்தர் கலிவெண்பா' என்று பெரும் புகழ் படைத்த இன் கவியாம். அடியார்கள் உண்மை அன்போடு இச்செய்யுளை ஓதினால் துயரெலாம் நீங்கப் பெற்று எல்லா நன்மையையும் பெறுவர் என்பது சான்றோர்க்குக் கண்கூடு.

மதுரையில் எழுந்தருளியுள்ள அங்கயற் கண்ணம்மைமீது அரிய பிள்ளைத்தமிழ் ஒன்று பாடி முடித்தார் நம் புலவர். இதை அவர் மதுரையில் ஆண்டுவந்த திருமலை நாயக்கர் அவையில் அரங்கேற்ற விரும் பினார்; விரும்பி மதுரையை நோக்கிப் புறப் பட்டார். அங்கயற்கண்ணம்மை அரசரது கனவில் தோன்றி, "அடியவன் ஒருவன் நம்மீது பிள்ளைத்தமிழ் பாடி அதை அரங் கேற்ற ஈண்டு வருகிறான். நீ எல்லாச்

சிறப்போடும் சென்று அவனை எதிர்கொள்வாயாக" என்று அருளினர். திருமலை நாயக்கர் சிவிகை முதலிய பல சிறப்புக்களோடு சென்று அடிகளை எதிர்கொண்டு அடிபணிந்து வரவேற்று நின்ருர். இறைவியின் கருணைத் திறத்தை நாவார வழுத்திய புலவர் மதுரையில் தம் அருமைப் பிள்ளைத்தமிழை அரங்கேற்றினர்; மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழிலிருந்து நாள்தோறும் ஒரு பருவம் வீதம் பத்து நாட்களில் பத்துப் பருவங்களையும் எடுத்துச் சொற்பொழிவாற்றி விளக்கினர். கேட்டோர் யாவரும் பரவசம் எய்தினர்.

அடிகளுடைய பாடல்கள் தமிழ் இலக்கியத்திலேயே ஒரு தனிச் சிறப்பாக இருந்தன. இறைவியே அரங்கேற்றவையில் வந்திருந்து அமுதினுமினிய அருந்தமிழ்ச் செய்யுட்களை ஆரத்துய்த்துப் புலவரைப் புகழ்ந்தார் எனின், அவர்தம் செய்யுட்களின் கடவுட் தன்மையை எவ்வாறு எடுத்துரைப்பது? அந்நாலின் முத்தப் பருவத்தில் செய்யுட்களுக்குப் பொருள் விரிக்குங்கால் மீனுட்சியம்மை அரசர் மகளாகத் தோன்றி,

தம் திருக்கழுத்தில் அணிந்திருந்த முத்து மாலையைக் கழற்றி அடிகள் கழுத்தில் இட்டு மறைந்தருளினர். இது கண்ட அவையோர் முத்தப்பருவத்திற்கேற்ப முத்துமாலை அளித்த அரசிளங்குமரியின் அருளை மெச்சினர்.

வருகைப் பருவத்தில் ஒரு பாடலை அடிகள் ஓதிய அளவில் அங்கு அரசிளங்குமரி உருவில் வந்திருந்த இறைவி அப்பாடலை மற்றும் ஒரு முறை கூறச் சொல்லிக் கேட்டு மறைந்தருளினர். யாவரும் அடிகளது தெய்வப் புலமையை வியந்தனர். அரசர் அடிகளை அரியணைமீது அமர்த்தி அளவிலா அன்பு சொரிந்து எண்ணற்ற பரிசுகளை வழங்கினர். அடிகள் மீனுட்சியம்மைமீது 'குறம், இரட்டை மணிமாலை'முதலியன பாடி இன்புற்ருர்.

அரசர் ஒருமுறை உணவு அருந்தாது நெடுநேரம் அரசாங்க அலுவல்களைக் கவனித்துக்கொண்டே இருந்துவிட்டார். இதைக் கண்ட அடிகள் 'வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி-தொகுத்தார்க்கும் துய்த்த லரிது'

என்னும் குறளின் பொருளை அரசருக்கு எடுத்துக் கூறினர். அரசர் திருக்குறளின் அருமை பெருமைகளை எல்லாம் குமரகுருபரர் கூறக் கேட்டு அப்பெருநூலை ஆராய்ந்தறியத் தமக்குப் போதிய கால அளவு இன்மையால் தம்போன்ருேர்க்குப் பயன்படுமாறு குறள் நூலிற் கண்ட அறவுரைகளைத் தொகுத்து ஒரு சிறுநூலாக இயற்றித் தருமாறு வேண்டினர். அரசர் வேண்டுகோளுக்கிணங்கி, குமரகுருபரர் 'நீதிநெறி விளக்கம்' என்னும் அரிய நூலை இயற்றியருளினர்.

பிறகு குமரகுருபரர் மதுரையினின்றும் நீங்கிச் சோணுடு சேர்ந்தார். அங்குத் தருமபுர ஆதீனத்தின் தலைவராயிருந்த மாசிலா மணிதேசிக சுவாமிகளை அடைந்து அவரிடம் ஞான தீட்சை பெற விரும்பினர். அத்தேசிகர் குமரகுருபரரைச் சிதம்பரம் சென்று நடராச மூர்த்தியை வணங்கித் திரும்பிவந்து தீட்சை பெறுமாறு பணித்தார். அடிகளும் தில்லைக்குப் புறப்பட்டார். வழியில் வைத்தீசுவரன் கோயிலில் எழுந்தருளியுள்ள

முத்துக்குமார சுவாமி மீது ஓர் அரிய பிள்ளைத் தமிழைப் பாடி முடித்தார்.

பிறகு தில்லையை அடைந்து நடராச மூர்த்தியை வணங்கினர். தம்மை 'இலக்கணம் கல்லாக் கவி' என்று இகழ்ந்த ஒரு பௌராணிகரை அறிவுறுத்த வேண்டிச் 'சிதம்பரச் செய்யுட்கோவை'யைப் பாடினர்.

சிதம்பர நடனம் கண்ட குமரகுருபரர் மறுபடியும் தருமபுரத்தை அடைந்து மாசிலாமணி தேசிகரிடம் ஞான தீட்சை பெற்ருர். அவர் ஞானகுரவரின் கட்டளைப்படி காசியில் சிவமடம் கட்டுவதற்கு வேண்டிய இடம் முதலியவற்றை முகலாய மன்னரிட மிருந்து பெற விரும்பிப் புறப்பட்டார். காசியை அடைந்த புலவர் காசி விசுவநாதரை வணங்கிக் 'காசிக் கலம்பகம்' பாடினர்.

முகலாய மன்னரை நேரிற் கண்டு பேசி, அவரிடம் மடம் கட்ட இடம் பெற விரும்பிய புலவர், மன்னவன் மொழியாகிய இந்துஸ்தானியைக் கற்க விரும்பிக் கலைமகள்

மீது தோத்திரமாக, 'சகலகலாவல்லிமாலை' என்னும் பத்துப் பாடல்களைப் பாடினார். கலைமகள் அருளால் புதுமொழி விரைவில் புலவருக்குக் கைகூடிற்று.

புலவர் அரச அவையை அணுகித் தன் வேண்டுகோளை விடுத்தார். மன்னர் அவ



ருக்குச் செய்யவேண்டிய சிறப்புக்களைச் செய்யாமையால், குமரகுருபரர் அவரை நோக்கி, "அரசே! துறவியாகிய எம்மை நீர் இவ்வாறு நடத்துதல் தவறு" என்று

கூறினர். அதற்கு மன்னர், "நீர் தெய்விகம் காட்டினால் உமக்குப் பெருமை செய்வேன்" என்றார். இதைச் செவியுற்ற அடிகள் மறு நாள் காளிதேவியின் அருளால் பெற்ற ஓர் அரிமாவினை இவர்ந்து அரச அவையிற் புகுந் தார். அதனைக் கண்டு யாவரும் அஞ்சி விலகினர். பிறகு அடிகளின் கருணையால் யாவரும் தெளிந்தனர். மன்னர் குமர குருபரரைப் புகழ்ந்து கொண்டாடத் தொடங் கினர். இது அவ்வவையில் இருந்த பல மகம் மதியப் புலவர்களிடையே பொருமையை உண்டாக்கிற்று. இவ்வழுக்காற்றுப் புலவர்கள் அடிகள்மீது பல குற்றங்களையும் சாட்டிப் பார்த்தனர். ஆயினும் அவர் தமது ஆற்ற லால் தம் பெருமையை நிலைநாட்டிக் கொண்டார்.

பிறகு மன்னர் அடிகளை வேண்டிய பொருளை வேண்டும்படி பணித்தார். புலவர் தமக்குக் காசியில் சிவமடம் கட்டுவதற்கு இடம் வேண்டும் என்று கேட்டார். மன்ன ரும் பெருமகிழ்வோடு அளித்தார். குமரகுரு பரர் கட்டிய மடத்திற்குக் குமரசுவாமி மடம்

என்பது பெயர். அம்மடத்தின் வழிவழி வந்ததே திருப்பனந்தாள் மடம் என்று இக்காலத்தில் பெருமையோடு விளங்கும் மடமாகும். குமரகுருபரர் திருக்கேதார நாதருக்கும் கோயில் எடுப்பித்துப் பல திருப்பணிகளும் செய்வித்தார். இறுதியில் முத்தித் தலமாகிய காசியில் இருந்து திருமலை நாயக்கர்பால் தாம் பெற்ற பரிசில்களையும் வரிசைகளையும் வறியோர்க்கீந்து பேரறம் செய்து துறவிகளுக்கு ஒரு வழிகாட்டியாய் நின்றார். பின்பு சிலகாலம் கழித்து அடிகள் உடற்பொறையை நீத்துப் புகழுடம்பை இவ்வுலகில் நிறுத்தி மறுபிறப்பில்லாப் பேரின்பம் எய்திச் சிவத்தோடு ஒன்றாய்க் கலந்தார்.

## வினாக்கள்

1. மூங்கைப்பிள்ளைக்குப் பேச்சு வந்த வரலாறு யாது ?
2. குமரகுருபரர் 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்' அரங்கேற்றியபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் குறிக்கவும்.
3. குமரகுருபரர் இயற்றிய நூல்கள் யாவை ?
4. முகலாய மன்னரிடம் குமரகுருபரர் வேண்டியது யாது ? அதை அவர் எங்ஙனம் பெற்றார் ?

## 5. அந்தகக்கவி வீரராகவ முதலியார்

தமிழகத்தில் தொண்டை நாடு என்று ஒரு நாடு உண்டு; அது சான்ேறார் நிரம்பி யுள்ள நாடு. 'தொண்டை நன்னாடு சான்றோ ருடைத்து' என்னும் புகழ்பெற்ற நாடு அது. அந்நாட்டில் காஞ்சிபுரம், திருவண்ணாமலை, திருக்கழுக்குன்றம் முதலிய தலங்கள் உள. அந்நாடு பாலாறு பாய்ந்து வளமுறுத்தப் பெற்றது. இத்தகைய சிறப்புடைய தொண்டை நாட்டில் புதூர் என்னும் பெயருடைய பழம்பதி ஒன்று உண்டு. அவ்வூரில் ஒழுக்கம் நிரம்பிய வேளாண் மக்கள் பலர் வாழ்ந்து வந்தனர்.

இவ்வேளாண் மக்களில் வடுகநாத முதலியார் என்பவர் ஒருவர். இவர் பல ஆண்டுகள்வரையில் மகப்பேறு இன்றி வருந்தி வந்தார். பிறகு இறைவன் திரு வருளால் ஒரு குழந்தை பிறந்தது. அக் குழந்தை பார்ப்பதற்கு மிக அழகுடையதாயும் ஆரோக்கியமுடையதாயும் காணப்பட்டதாயி

னும், அஃது உறுப்புக்களில் சிறந்தனவாய இரண்டு கண்களுமின்றிப் பிறவிக் குருடா யிருந்தது. இது கண்ட பெற்றோர்கள் ஆராத் துயரத்தில் அழுந்தி உழந்தனர். மகவை யளிப்பதுபோல் அளித்துத் தம்மைத் தீராத் துயரத்தில் ஆழ்த்திவிட்ட விதியை நொந்து கொண்டனர். வருந்துவதால் உளதாய பயனொன்றும் இன்றி நாட்களும் ஆண்டுகளும் கழிந்தன. மகனும் கண் தெரிதலின்றி வயது மட்டும் நிரம்பி வந்தான்.

வடுகநாத முதலியார் தமது மகனுக்கு 'வீரராகவன்' என்று பெயரிட்டார். வீர ராகவனுக்கு ஊனக் கண்கள் இல்லாம லிருந்தும், அவன் மிக அறிவுடையவனுகச் சிறுவயதிலிருந்தே காணப்பட்டான்; நுண் ணறிவு உடையவன் என்பது அப்பொழுதே காண்போர்க்குப் புலனுயிற்று.

சில்லாண்டுகள் கழியவே, வீரராகவன் கல்வி பயிலவேண்டிய பருவம் வந்தது. பிறவிக் குருடனுகிய தமது புதல்வன் எவ் வாறு கல்வி பயிலக்கூடும் என்னும் துன்பம்

அவன் பெற்ருேர்களைப் பீடிக்கத் தொடங் கியது. மற்றையோர் மக்கள் எல்லாரும் பள்ளிக்குச் செல்வதைக் காண அவர்களது துயரம் பன்மடங்கு பெருகிற்று. இவர்கள் வருத்தத்தை எவ்வாருே கண்டு கொண்ட வீரராகவன், பெற்ருேர்களை அணுகி, "நான் கல்வி கற்க இயலாது என்று நீங்கள் கருது வது முற்றிலும் தவறு; கற்க வேண்டுவன வற்றையெல்லாம் ஆசிரியர் என் முதுகில் எழுதிக் காட்டினுல் நான் மிக விரைவில் எழுத்துக்களையெல்லாம் பயில்வேன்; இதில் ஒருவித வருத்தமுமில்லை; நானும் பள்ளிக்குச் சென்று கல்வி பயில விரும்புகின்றேன்" என்ருன்.

அறிவு மிகுந்த தம் மகனது அருஞ்சொற் கள் பெற்ருேர்தம் காதில் தேன் பாய்ந்த தெனப் புகுந்தன. பெற்ருேர்களும் மனம் உவந்து தம் மகனைப் பள்ளிக்கு அனுப்பி வைத்தனர். பள்ளியில் வீரராகவன் தனது முதுகையே பலகையாகக் கொண்டு பல நூல் களையும் கற்றுத் தெளிந்தான். அவ்வூர்ப் பள்ளியில் கற்கக் கூடியனவற்றையெல்லாம்

கற்றறிந்த வீரராகவ முதலியார் தாம் பிறந்த ஊராகிய புதூரை விட்டு நீங்கிப் பொன் விளைந்தகளத்தூரை அடைந்து அங்கு வாழ்ந்து வந்தார். தமிழில் மற்றுமுள்ள பெரு நூல்களை எல்லாம் காஞ்சியம்பதியிலுள்ள பெரும் புலவர்களை அணுகிக் கற்றுக்கொண்டார்; இயற்றமிழேயன்றி இசைத்தமிழும் முறையே பயின்று யாழ் வாசிப்பதில் மிகுந்த தேர்ச்சியும் பெற்றார்.

இவ்வாறு கல்வியறிவு நிரம்பிய வீரராகவருக்குச் செய்யுளியற்றும் பழக்கமும் மிக விரைவில் கைகூடிற்று. இவரது கவித் திறமையைக் கண்ட யாவரும் இவரைக் 'கவி வீரராகவ முதலியார்' என்று அழைப்பது மரபாயிற்று. மணம் புரிந்துகொள்ளும் வயது எய்தியவுடன், அவர் அறிவிலும் அழகிலும் குலத்திலும் கல்வியிலும் சிறந்த ஒரு பெண்ணை மணம் புரிந்துகொண்டார். நாளடைவில் கவிஞரது பெற்றோர்களும் இவ்வுலக வாழ்வை நீத்து முத்தி நிலை அடைந்தனர். நம் புலவர் கற்புடைய மனைவியோடு இல்லறம் இனிது நடாத்தி வந்தார்.

இவ்வாறிருக்க ஒரு நாள் வீரராகவர் ஓர் அலுவல் நிமித்தம் புறத்தே சென்று மீண்டவர், மனைவாயிலில் வீற்றிருந்த தம் மனைவியார் தம்மை மதியாதிருந்ததுமன்றி அதை எடுத்துக் கூறிய அவள் தோழிகளிடம், "இவர் புலவரானால் எனக்கு என்ன? இவர் பரிசில் பெற்றுக்கொண்டு வந்திருக்கிறாரோ?" என்று எள்ளி நகையாடியது இவருக்கு மிகுந்த மனவருத்தத்தை உண்டாக்கிற்று. இவ்வருத்தம் பொறாத புலவர் அக்கணமே மனையை விட்டு அகன்றார். அதை உணர்ந்த அவர் மனைவியார் தம் குற்றத்தைப் பொறுத்தருள வேண்டிக் கொண்டும் புலவர் பொருட்படுத்தாமல் வெளியே புறப்பட்டார்.

வீட்டை விட்டு அகன்ற புலவர் வழியில் பல இன்னல்களை அனுபவித்து இறுதியில் ஈழநாட்டை அடைந்தார்; இவரது தமிழ்ப் புலமையை உணர்ந்த பலர் இவரிடம் மாணவர்களாக வந்து சேர்ந்தனர்; சிலர் இவரை விட்டுப் பிரியாது எப்போதும் உடனுறைவாராயினர்.

அந்நாட்டை அக்காலத்தை பரராசசிங்கம் என்னும் அரசர் ஆண்டுவந்தார். அவ்வரசரைக் காணப் புலவர் பல நாட்கள் வரையில் காத்திருக்க வேண்டியதாயிற்று. பரராசசிங்கம் ஒருநாள் தமது அரண்மனைத் தோட்டத்தில் ஒரு விநோத இயற்கைக் காட்சியைக் கண்டார்; அங்கு ஒரு மரப்பொந்தில் இருந்த கிளிக்குஞ்சுகள் தம் தாயின் வரவை எதிர்நோக்கி வெளியே தலையை நீட்டியும் அங்கு ஆடிக்கொண்டிருந்த வாழைக் குருத்தைக் கண்டு பாம்பென மருண்டு அஞ்சித் தம் தலையை மறுபடியும் உள்ளிழுத்துக் கொண்டும் இவ்வாருக மாறிமாறி வருந்தி மயங்கியதைக்கண்டு அரசர் இறும்பூது எய்தினர்; ஆயினும் அக் குஞ்சுகளின் அச்சத்திற்கு அவருக்குக் காரணம் விளங்கவில்லை. தம் அவைப் புலவர்களையெல்லாம் கேட்டும் அவர்களால் காரணம் கூற இயலவில்லை. பிறகு அரசர் தம்மைக் காணக் காத்திருந்த வீரராகவரை வரவழைத்துக் கேட்கத் தீர்மானித்தார்.

அக்காலத்தில் அரசர்கள் அந்தகர்களைக்

காணக் கூடாது என்ற ஒரு கருத்து இருந்தது. அதற்கேற்ப அரசர் முன்பு ஒரு திரையிட்டு அதன் பின்புறம் புலவரை வீற்றிருக்கச் செய்தனர். இதையறிந்த கவிஞரின் மாணவர்களில் ஒருவன் திரையிடப் பெற்றதைப் பற்றித் தம் ஆசிரியருக்கு அறிவிக்க விரும்பி 'சிவசிதம்பரம்' என்று



இருமுறை கூறினான். அவன் கருத்தை உடனே உணர்ந்த புலவர் 'அண்ணாமலை' என்று இருமுறை கூறினார். உடனே திரை தீப்பற்றிக்கொண்டது. புலவரின் அறிவின் பெருமை அரசருக்கு அச்சம் ஊட்டியது.

ஆயினும் அவரை இன்னும் சோதிக்க விரும்பிய மன்னர் வில்லும் அம்புமாக அவர் எதிரில் நின்றுகொண்டு, "எமது கோலம் இப்போது எவ்வாறு உளது?" என்று வினவினார். இதற்குப் புலவர், "அரசே! இங்கு அரக்கர் கோமான் இல்லையே; நான் தமிழ்க் கோமான் தானே! மாயமானும் இங்கு இல்லையே; நான் கல்விமானன்றோ? இங்கு ஏழு மராமரங்களும் இல்லை. யாவரும் ஈண்டுப் புலவரன்றோ!" என்னும் பொருள்படும்படி இனிமையான பாடல் ஒன்றைப் பாடினார். புலவர் பெருமையினை முற்றவும் உணர்ந்த அரசர் அவர் வந்த கருத்தை வினவினார். புலவர் அரசர் அரண்மனைத் தோட்டத்தில் கண்ட காட்சியைக் குறித்து ஒரு பாடலைப் பாடித் தாம் பரிசில் பெறவந்ததைக் குறிப்பிட்டார். தம் ஐயத்திற்கு விடைபெற்ற அரசர் மனம் மிக மகிழ்ந்து யானை முதலிய பரிசில்களை வழங்கினார். உடனே புலவர் திறமையாக, "ஒரு வாய்க்குச் சோறுபோட இயலாத யாம் நால்வாயினை (தொங்குகின்ற வாயையுடைய யானையை) எவ்வாறு காப்

யாற்றுவோம் ?" என்றார். அதுகேட்டு வியந்த மன்னர் யானையோடு பல ஊர்களையும் பரிசிலாகக் கொடுத்தார்.

பிறகு புலவர் பரராசசிங்கம் அவைக்களத்தே சிலநாள் தங்கியிருந்து கம்ப இராமாயணச் சொற்பொழிவுகள் பல ஆற்றி யாவருக்கும் களிப்பூட்டினார். புலவரும் அமைதியோடிருந்த அக்காலத்தில் 'திருவாரூருலா' என்னும் மிக அழகிய உலாப் பிரபந்தம் ஒன்றைப் பாடி முடித்தார். இவரது பாடல் பெருமைகளைக் கேட்டு மகிழ்ந்த புலவர்கள் யாவரும் "வீரராகவன் கவி கேட்ட பின், ஒட்டக்கூத்தன் கவியும் ஓங்கிய கம்பன் கவியும் பட்டப்பகல் விளக்காய்ப் பட்டவே" என்று புகழ்மாலை சூட்டினர்.

பிறகு புலவர் தாம் பெற்றுவந்த பரிசில்கள் பலவற்றோடு தம் ஊருக்குத் திரும்பினார். புலவர் பரிசில்களோடு வந்ததைத் தம் மனைவியாருக்குச் சொல்லியனுப்பினார். வருத்தத்தோடு சென்ற புலவர் திரும்பி வந்தனரே என்று மகிழ்ச்சிமீதூரிய அவ்

வில்லக்கிழத்தியார் அன்போடு அவரை வரவேற்ருர். புலவரும் தம் மனைவியின்மீது சினம் தணிந்தவராய், தாம் கொண்டுவந்த பரிசில்களை வைத்துக்கொண்டு இனிது வாழ்ந்து வந்தார்.

புலவர் 'திருக்கழுக்குன்றமாலை' என்னும் இனிய செய்யுள் நூல் ஒன்றையும் இயற்றி யுள்ளார். பிறகு புலவர் பல்லாண்டு இவ்வுல கில் வாழ்ந்திருந்து புகழுடம்பை எய்தினர்.

### வினுக்கள்

1. வீரராகவன் பிறந்ததும் பெற்ருேர்கள் வருத்த மடையக் காரணம் என்ன?
2. ஊரிலுள்ள குழந்தைகள் பள்ளிக்குச் செல்வதை அறிந்த வீரராகவன் தம் பெற்ருேரிடம் யாது கூறினன்?
3. வீரராகவன் எங்ஙனம் கல்வி பயின்ருன்?
4. வீரராகவர் மனையை விட்டு நீங்கிச் செல்ல வேண்டி நேர்ந்தது எதனுல்?
5. பரராசசிங்கம் அவைக்களத்தில் நிகழ்ந்தவை யாவை?

## 6. பொய்யாமொழிப் புலவர்

தொண்டை நன்னாட்டில் உறையூர் என்னும் பெயருள்ள ஊரொன்று உண்டு. இதற்குச் செங்காட்டங் கோட்டத்து உறையூர் என்று பெயர். இவ்வூரில் ஏறக்குறைய நானூறு ஆண்டுகளுக்கு முன்பு பொய்யாமொழிப் புலவர் பிறந்தார். இவர் வயிரபுரம் என்னும் ஊரில் கல்வி பயின்று வந்தார். இவர் ஆசிரியரிடம் இவரேயன்றி இன்னும் சில மாணவர்களும் தமிழ் கற்று வந்தனர். ஆசிரியருக்கு உடைமையாக அவர் மனையை அடுத்து ஒரு தோட்டம் இருந்தது. இவரிடம் கல்வி கற்று வந்த மாணவர்கள் ஒருவர் மாற்றி ஒருவராக அக்கொல்லையைக் காத்து வருவது வழக்கம்.

ஒருநாள் முறைப்படிப் பொய்யாமொழிப் புலவர் ஆசிரியர் கொல்லையைக் காத்திருந்தார். அப்போது வெயில் மிகுதியாய் இருந்தமையால், அவருக்குத் தூக்கம் தம்மை மறந்து

வந்து விட்டது. எனவே, அங்கேயே அவர் படுத்து உறங்கிவிட்டார். அப்போது அவ்வூர்த் தலைவராயிருந்த காளிங்கராயர் என்பவருடைய குதிரை ஒன்று அவ்வழியே வந்து கொண்டிருந்தது. பொய்யாமொழியார் தூங்கி விட்டதால் குதிரை கொல்லைக்குள் இறங்கி நன்ருக வளர்ந்திருந்த பயிரையெல்லாம் மேய்ந்து விட்டது. துயில் நீங்கியபின் இதைக் கண்ட பொய்யாமொழியார் பேரச்சம் கொண்டார். ஆசிரியர் சினம் கொள்வாரே என்று பயந்தார்; அருகிலிருந்த காளி கோவிலிற்குச் சென்று தேவிமுன்பு நின்று தமது குறையைக் கூறிக்கொண்டார். இவரது துயர் கண்ட காளி, "இனி நீ விரும்பியவாறே எல்லாம் முடியும்" என்றுஅருள் புரிந்தாள். காளியருள் புரிந்த அமயத்தே பொய்யாமொழியாருக்கு அருள் வாக்குப் பிறந்தது. உடனே, அவர் கொல்லை வாயிலிற் சென்று நின்ருர்; தம்மை அறியாமலே தமக்கு அருங்கவிகள் பாடும் வன்மை ஏற்பட்டிருப்பதை உணர்ந்தார். "வாய்த்த வயிரபுரி மாகாளி அம்மையே! அணிவயலிற் காய்த்த கதிரைத் தின்ற காளிங்

கன் குதிரையை மாளக் கொண்டு போ" என்று வசை பாடினுர். உடனே அக்குதிரை கீழே விழுந்து இறந்தது.

இச்செய்தி உடனே யாண்டும் பரவிற்று. இதைக் கேட்ட ஆசிரியர், "ஊர்த் தலைவர் என் செய்வாரோ?" என்று அஞ்சியவராய்ப் பொய்யாமொழியாரிடம் நடந்ததைக் கூறு மாறு வினவினுர். பொய்யாமொழியாரோ, குதிரை இறந்ததற்கு ஆசிரியர் வருந்துகிருர் என்று உணர்ந்து, முன்பு கூறிய கடைசி அடியைமட்டும் மாற்றி, "குதிரையை மீளக் கொண்டு வா" என்று பாடினுர். உடனே குதிரை உயிர்த்து எழுந்தது. இதனைக் கண்ட யாவரும் பொய்யாமொழியார் கடவுள் அருள்பெற்ற பெரும் பாவலர் என்று தீர்மானித்தனர். ஆசிரியர் தமது மாணவனை ஆசீர்வதித்தார். அவர் கூறியபடியே நடந்து வந்ததால் ஊரார் அவரிடம் அஞ்சி ஒழுக லாயினர். அவர் மொழி எப்போதும் பொய்க் காமல் இருந்ததால் அவருக்குப் 'பொய்யா மொழி' என்னும் பெயர் நிலையாக ஏற்பட்டது

பரிசில் வேண்டிப் புரவலர்பால் செல்லு

தல் புலவர்கள் மரபு. பொய்யாமொழிப் புலவரும் மதுரைக்கு அடுத்த தஞ்சாக்கூர் என்னும் ஊரில் வாணன் என்னும் செல் வந்தர் ஒருவர் வாழ்ந்து வந்ததைப் பற்றிக் கேள்வியுற்று, அத்தஞ்சைவாணன் மீது ஓர் ஐந்திணைக்கோவை ஒன்றினைப் பாடி அவரிடம் அதைக்கொண்டு செல்லப் புறப் பட்டார். அத்தஞ்சைவாணன் பாண்டிய மன்னனுடைய சேனைக் காவலர்களில் ஒரு வராதலின் அவரால் தாம் பெறும் பரிசில் பெரும் பரிசிலாக இருக்கும் என்று புலவர் எண்ணினர். புலவர் தஞ்சாக்கூர் சென் றடைந்த அமயம் தஞ்சைவாணன் அரண் மனைக்குச் சென்றிருந்தார் என்றும் அவர் திரும்பிவரச் சிறிது நேரம் ஆகும் என்றும் அங்குள்ளார் கூறினர். தஞ்சைவாணனது மனைவியாரும் செந்தமிழ்ப் பயிற்சி உடையரா யிருந்ததால் வந்த புலவரை வரவேற்று இருக்கச் செய்து, அவர் இயற்றிக்கொண்டு வந்த கோவையைத் தம் முன்பே அரங்கேற் றச் சொல்லிக் கேட்டார். மிக அழகாக அமைந் திருந்த செய்யுட்களைக் கண்ட வாணன்

தேவியார் அக்கோவையிற் கண்ட ஒவ்வொரு செய்யுளுக்கும் ஒரு தங்கத் தேங்காய் பரிசிலாக அளித்தார்; புலவருக்கு ஏறத்தாழ நானூறு பொன் தேங்காய்கள் பரிசிலாகக் கிடைத்தன. புலவரும் பரிசில்களைப் பெற்றுக்கொண்டு புறப்பட்டார். அவர் சிறிது தூரம் சென்றிருக்கக்கூடும்; அதற்குள் வாணனும் மனைக்குத் திரும்பி விட்டார்; நிகழ்ந்ததையெல்லாம் உணர்ந்தார்; சில ஏவலாட்களை அனுப்பிப் புலவரைத் திரும்பவும் அழைத்துவரச் செய்தார்; புலவரை மறுபடியும் தம் முன்பு கோவைப் பாடல்களை அரங்கேற்றச் செய்தார்; செய்யுட்களைக் கேட்ட வாணன் தம் தேவியை நோக்கி, "நீ பெருங் குற்றம் செய்துவிட்டாய்; இப்புலவர் பாடல் ஒவ்வொன்றிற்கும் ஒரு தங்கத் தேங்காய் பரிசில் அளித்தது தவறு" என்று கூறி அவரிடமிருந்த தேங்காய்களைத் திரும்பப் பெற்றுக்கொண்டார். இச்செயலைக் கண்ட தேவிக்கு அச்சமும் புலவருக்கு வருத்தமும் உண்டாயின. ஆனால் வாணன் செய்ததென்ன? பெற்றுக்கொண்ட தங்கத்

தேங்காய் ஒவ்வொன்றின் ஒவ்வொரு கண் ணிலும் ஓர் இரத்தினத்தைப் பதித்துப் புலவருக்குத் திரும்பவும் பரிசிலாகக் கொடுத் தார். அவ்வளவு அழகிய பாடல்களைப் பாடிய புலவருக்கு இரத்தினங்கள் பதியாத தங்கத் தேங்காய்களைப் பரிசில்களாகக் கொடுத் திருக்கக்கூடாது என்பது அவர் கருத்து. என்னே அப்புரவலரின் வள்ளன்மை! தேவியாரும் புலவரும் அகமகிழ்ந்தனர்.

தஞ்சாக்கூரிலிருந்து புறப்பட்டு வந்த புலவர் காளையார் கோயில் என்னும் ஊரை அடைந்தார். அப்போது கடுமழை கொட்டத் தொடங்கிற்று. ஒண்ட இடமின்றி நனைந்து வந்த புலவர் இறுதியில் ஒரு வீட்டிற்குள் விளக்கு எரிவதைக் கண்டு அங்குப் போய்த் தங்க விரும்பினர். அவ்வீட்டில் கூத்தாள் என்னும் விலைமாது ஒருத்தியும், அவள் தமக்கை, தாய், பாட்டி என்பவர்களும் ஆக நால்வர் இருந்தனர். இவர்கள் நால்வரும் பிறவிக் குருடர்கள். இதைக் கண்ணுற்ற பொய்யாமொழியார் மனம் வருந்தி அவர்க ளுக்குப் பார்வை உண்டாகும்படி அருளி

ளுர். இவர் வாக்குப் பொய்யாதாதலால் அந் நால்வரும் காட்சிப் பேற்றை அடைந்தனர்.



பிறகு அவ்விடம் விட்டு நீங்கி வேறு பல தலங்களுக்குச் சென்று திரும்பவும் அக்காளையார் கோயிலுக்குத் திரும்பி வந்தார். முன்பு தாம் தங்கியிருந்த பொருள்மகளிர் வீட்டை அடைந்து கதவைத் தட்டினர். உள்ளிருந்த கணிகையர் தாம் கண்ணைப் பெற்ற செருக்கால் கதவினைத் திறவாது

வாளா இருந்தனர். இது கண்டு சினமடைந்த புலவர், "பழைய குருடி கதவைத் திறடி" என்றார்; உடனே அக்கணிகையர் யாவரும் தமது கண்களைப் பொருக்கென இழந்தனர். அருள்வாக்குப் பெற்ற புலவரை அவமதித்தோம் என அஞ்சி அக்கணிகையர் அடிபணிந்தனர். அருள் மிகுந்த புலவரும் அவர்களுக்கு மறுபடியும் காட்சிப் பேற்றை அருளினார்.

தம் புலமையை மதுரையில் புலவர் குழுவில் தோற்றுவிக்க விரும்பிய பொய்யாமொழியார் பாண்டியன் அவைக்களம் அடைந்தார். அப்பொழுது அங்கு ஆட்சி புரிந்துவந்த பாண்டியன் வணங்காமுடியினன். தமது புலமையை மதிக்கும்படி அம்மன்னனிடம் பொய்யாமொழியார் பல முறை மன்றாடியும் பலிக்கவில்லை. அங்குக் கருங்கல்லில் திருவுருவம் தாங்கி நின்ற சங்கப் புலவர்கள் தலையசைத்து இவரும் தமக்கு நிகர் என்று ஒப்புக்கொள்ளச் செய்தார்; பொற்றாமரைக் குளத்தில் அமிழ்ந்து கிடந்த சங்கப்பலகையை மிதந்து வரச்

செய்தார். இத்துணை செய்தும் அரசன் புலவரது புலமையை மதியானாயினான். புலவர் வெகுண்டு பாண்டியன் அவையை விட்டு நீங்கினார். புலவர் வெகுளின் பாண்டியன் சீர் அழியுமே என்று அஞ்சிய பாண்டிய மாதேவி, மன்னவன் அறியாமல் புலவரது சிவிகையைத் தாங்கிச் சென்றார். இதை உணர்ந்த புலவர் அரசியின் கற்புப் பண்பினைப் புகழ்ந்து பாராட்டி அவர் தந்த பரிசில்களை ஏற்றுக்கொண்டு வழியேகினார்.

பிறகு புலவர் சோழநாட்டை அடைந்தார். அங்குச் சீனக்கர் என்னும் பெருந்தகையார் வாழ்ந்து வந்தார். அவருடைய ஆதரவின் கீழ் சிலகாலம் புலவர் இருந்து வருவாராயினார். பொய்யாமொழியாருக்கும் சீனக்கருக்கும் நட்பு முதிர்ந்து வளர்ந்து வந்தது. இவர்கள் உடலும் உயிரும் போல் இருந்து வந்தனர்.

பிறகு சிலகாலம் கழித்துச் சீனக்கர் இவ்வுலக வாழ்வை நீத்து இறைவன் திருவடி

நீழலை நண்ணினர். அரசனும் மற்றுமுள்ள சான்றோர்களும் பிரபுவின் மறைவுக்கு ஆற்ருது வருந்தினர். சீனக்கர் மனைவியார் தாமும் தம் கணவரோடு உடன்கட்டை ஏறி உயிர் துறக்கத் துணிந்தார். சுடுகாட்டில் சிதையில் இடப்பட்ட சீனக்கர் உடலும் அவர் மனைவியார் உடலும் பற்றி எரியத் தொடங்கின.

அதுபோழ்து வேற்றூர் சென்றிருந்த புலவர் சீனக்கர் இறந்த செய்தியை அறிந்து ஓடோடியும் வந்தார். சீனக்கர் உடல் தீயில் வேவதைக் கண்டு உள்ளம் குமுறி உடல் பதறி நின்ருர்; தன்னுயிர் நண்பராகிய சீனக்கரை விட்டுப் பிரிந்து வாழ விரும்பாத புலவர் தமக்கும் சிதை விரிந்து இடங்கொடுக்குமாறு ஓர் அரிய பாடலைப் பாடினர். அவ்வளவில் சிதை விரிந்து புலவருக்கு இடம் தந்தது. யார் சொல்லையும் கேளாராய்ப் புலவர் சிதைமீது ஏறியிருந்து தம்மை ஆதரித்த புரவலரோடு தம்முயிரையும் போக்கிக் கொண்டார். ஈதன்ருே உண்மை உழுவல் அன்பு!

இப்புலவர் இயற்றியுள்ள தனிப் பாடல்களும், தஞ்சைவாணன் கோவையும் இன்றைக்கும் கற்போர்க்குப் பேரின்பம் பயப்பனவாய் அமைந்துள்ளன.

## வினாக்கள்

1. பொய்யாமொழியாருக்குக் காளிதேவியருள் எங்ஙனம் கிட்டிற்று?
2. பொய்யாமொழிப் புலவருக்கு அப்பெயர் வரக்காரணம் என்ன?
3. 'பழைய குருடி கதவைத் திறடி' என்று புலவர் யாரிடம், எப்போது, ஏன் கூறினார்?
4. தஞ்சைவாணன் புலவருக்குச் சிறப்புச் செய்த பெருமையை எழுதுக.
5. சீனக்கருக்கும் புலவருக்கும் இடையே இருந்த நட்பின் தன்மையை விளக்குக.





